# ஆற்றுப்படை இலக்கியங்களில் பண்பாட்டுக்கூறுகள்

அழகப்பா பல்கலைக்கழக ஆய்வியல்

நிறைஞர் பட்டத்திற்காக அளிக்கபெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

செல்வி **தெ.மகேஷ்வரி**

**பதிவு எண் : 2012421014**

நெறியாளர்

முனைவர் மு.சுதா

உதவிப் பேராசிரியர்





**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக் கழகம்**

(தேசியத்தர நிர்ணயக் குழுவின் மறுதர மதிப்பீட்டில் ‘ஏ’ தகுதி பெற்றது)

காரைக்குடி - 630 003


சூலை - 2013

முனைவர் **மு.சுதா,** எம்.ஏ.,பி.எச்.டி.,பி.ஜி.டி.சி.ஏ.,
உதவிப்பேராசிரியர், தமிழ்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி 630 003.

**நாள்:** 31-7-2013

# நெறியாளர் சான்றிதழ்

"**ஆற்றுப்படை இலக்கியங்களில் பண்பாட்டுக்கூறுகள்**" என்னும் தலைப்பில் செல்வி தெ.மகேஷ்வரி செய்துள்ள இவ்வாய்வு அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் ஆய்வியல் நிறைஞர் பயின்ற காலத்தில் ஆய்வேடாகப் பணிக்கப்பெற்றது என்றும், இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் இதுவரை அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

31/7/2013

(முனைவர் மு. சுதா)
நெறியாளர்

முனைவர் மு. சுதா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003.

துறைத் தலைவர்
தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
காரைக்குடி-630 003
31/7/13

செல்வி **தெ. மகேஷ்வரி ,**
பதிவுஎண். *2012421014,*
ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி *630 003.*

**நாள்:** 31-7-2013

# ஆய்வாளர் உறுதிமொழி

“**ஆற்றுப்படை இலக்கியங்களில் பண்பாட்டுக்கூறுகள்**” என்னும் தலைப்பில் ஆய்வியல் நிறைஞர்பட்டத்திற்காக எழுதப் பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப்பட்டத்திற்கும் அளிககப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

(தெ. மகேஷ்வரி)
ஆய்வாளர்

**உறுதிக்கையொப்பம்** 31/7/2013

முனைவர் **மு. சுதா,** எம்.ஏ,. பி.எச்.டி. பி.ஜி.டி.சி.ஏ.இ,
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அழகப்பாபல்கலைக்கழகம்,
காரைக்குடி *630 003.*

# நன்றியுரை

என்னைப் பெற்று வளர்த்து பல்வேறு வகையிலும் மேன்மை நிலைபெறச் செய்த என் தாய் தெ.சாந்தி, தந்தை இரா. தெட்சிணமூர்த்தி அவர்களுக்கு என் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**"ஆற்றுப்படை இலக்கியங்களில் பண் பாட்டுக் கூறுகள்"** என்னும் தலைப்பிலான இவ்வாய்வினை மேற்கொள்ள இசைவளித்த தமிழ்த்துறைத் தலைவர் பேரா.முனைவர் மு. பாண்டி அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வினைச் செம்மையுற முடிப்பதற்குப் பல வகையிலும் நெறிப்படுத்திய நெறியாளர் முனைவர் மு. சுதா அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்கின்றேன்.

ஆய்வுக்கு உதவிய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

இவ்வாய்விற்கான நூல்களைப் பயன்படுத்த அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழக மைய நூலகத்திற்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாய்விற்க தேவையான நூலினை வழங்கிய தோழி சு. ஜோதி, க. கார்த்திகா இருவருக்கும் , முனைவர் பட்ட ஆய்வாளர்களுக்கும் என் நன்றியை உரித் தாக்குகின்றேன்.

இவ்வாய்வேட்டினை உரிய நேரத்தில் கணிணியில் தட்டச்சு செய்துகொடுத்த ஸ்ரீ விக்னேஷ்வரா கம்பியூட்டர்ஸ் நிறுவணத்தாருக்கும் எனது மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| தொல் | - | தொல்காப்பியம் |
| நற் | - | நற்றிணை |
| குறுந் | - | குறுந்தொகை |
| கலி | - | கலித்தொகை |
| அகம் | - | அகநானூறு |
| புறம் | - | புறநானூறு |
| பதி | - | பதிற்றுபத்து |
| திரு | - | திருமுருகாற்றுப்படை |
| பொருந | - | பொருநராற்றுப்படை |
| சிறு | - | சிறுபாணாற்றுப்படை |
| பெரு | - | பெரும்பாணாற்றுப்படை |
| மலை | - | மலைபடுகடாம் |
| பட் | - | பட்டினப்பாலை |
| சிலப் | - | சிலப்பதிகாரம் |
| திரு | - | திருக்குறள் |
| இளம் | - | இளம்பூரணனார்உரை |
| நச் | - | நச்சினார்க்கினயர்உரை |
| ஆய் | - | ஆய்வுக்கோவை |

# பொருளடக்கம்

# முன்னுரை

பதினெண்மேற்கணக்கு நூல்களில் பத்துப்பாட்டும், ஒரு பகுதியாகும். இதில் செம்பாதியாக அமைவது ஆற்றுப்படை இலக்கியங்கள் ஆகும். இந்த இலக்கியங்கள் பண்டையத்தமிழர்களின் பண்பாட்டை பிரதிப்பலிப்பதாக அமைந்துள்ளன.

'பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகல்' என கலித்தொகையில் பாடல் அடியில் குறிப்பிடப்படுகின்றன.

பண்பாடு என்பது ஒவ்வொருவரும் கற்று அறிந்து கொள்ளும் நெறிமுறையாகும். பண்பாட்டைபோற்றி பண்டையத்தமிழர்கள் வாழ்ந்தவர்கள் ஆவார்.

பண்பாடு என்பது தனிமனிதனை மட்டும் சார்ந்திருக்கவில்லை. தனிமனிதன் இனம், சமுதாயம் என்ற மூன்றையும் சார்ந்து உருவாகிறது. இனமும், சமுதாயமும் பண்பாட்டை வளர்க்கின்றன. இது மாத்யூ அர்னால்டு கருத்து ஆகும்.

பண்பாட்டினை உய்த்து உணர்வதற்கு மூன்று கூறுகளின் அடிப்படையில் இந்த ஆய்வு மேற்கொள்ளப்படுகிறது. அவை பொருள்சார்கூறுகள், அறிதல்சார்கூறுகள், நெறியியல் கூறுகள் என்பவை ஆகும்.

ஐந்து ஆற்றுப்படை இலக்கியங்களும் இந்த மூனறு கூறுகளின் அடிப்படையிலேயே ஆய்வு அமைகின்றன.

**ஆய்வுத்தலைப்பு**

"ஆற்றுப்படை இலக்கியங்களில் பண்பாட்டுக்கூறுகள்" என்பது ஆய்வுத்தலைப்பாகும்.

**ஆய்வுநோக்கம்**

ஆற்றுப்படை இலக்கியங்களின் வாயிலாக பண்டையத்தமிழரிடம் இருந்த பண்பாட்டினை வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் நோக்கமாகும்.

திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, பெரும்பாணாற்றுப்படை கூத்தராற்றுப்படை மட்டும் ஆய்வு எல்லையாக அமைந்துள்ளது.

## ஆய்வு சான்றாதாரங்கள்

ஆய்வு சான்றாதாரங்கள் இரண்டு நிலையில் அமைகின்றன. அவை முதன்மை சான்றாதாரங்கள், துணைமை சான்றாதாரங்கள் என்பன ஆகும்.

## முதன்மை சான்றாதாரங்கள்

சங்க இலக்கியங்களில் பத்துப்பாட்டுள் அமைந்துள்ள ஆற்றுப்படை நூல்கள் முதன்மை சான்றாதாரங்களாக உள்ளன.

## துணைமைச் சான்றாதாரங்கள்

ஆய்வுக்கு துணைமைச் சான்றாதாரங்களாக பக்தவத்சலபாரதியின் பன்பாட்டுமானுடவியல் என்னும் நூல் துணையாகவும், ஆய்வினை மேற்கொள்ள உதவின. மேலும் ஆராய்ச்சி நூல்கள், கருத்தரங்க கட்டுரைகள், ஆய்வுக் கோவைகள் சான்றாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

இந்த ஆய்விற்கு பண்பாட்டு மானுடவியல் அணுகுமுறையும், விளக்கவியல் அணுகுமுறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

**ஆய்வுப்பகுப்பு**

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

**இயல் ஒன்று**

திருமுருகாற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள்என்னும் முதலாம் இயலில் எத்தகைய நிலையில் உள்ளன என்றும், சிறப்பாக எந்த பண்பாடு கருதப்படுகிறது என்பதை கண்டறிவது இவ்வியலின் நோக்கமாகும்.

**இயல் இரண்டு**

பொருநராற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள் என்னும் இரண்டாம் இயலில் பண்டையத் தமிழரிடம் மிகவும் சிறந்த பண்பாக போற்றப்பட்டதை விளக்குவதே இவ்வியிலின் நோக்கமாகும்.

**இயல் மூன்று**

சிறுபாணாற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள் என்னும் மூன்றாம் இயலில் பண்டையத்தமிழரிடமும், மன்னனிடமும் காணப்படும் பண்புகளையும் கண்டறிவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**இயல்நான்கு**

பெரும்பாணாற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள் என்னும் நான்காம் இயலில் பண்டைய மக்களிடம் வாழ்க்கையிலும், உணவுமுறையிலும் எத்தகைய பண்புநிலை காணப்பட்டது என்பதை அறிவதே இவ்வயலின் நோக்கமாகும்.

**இயல் ஐந்து**

கூத்தராற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள் என்னும் ஐந்தாம் இயலில் பண்பாட்டு நிலைக்களன்களாக கருதப்பட்ட அனைத்தும் வெளிக்கொணர்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

முடிவுரையில் இவ்வாய்வில் கண்டறியப்பட்ட முடிவுகள் கூறப்பட்டுள்ளன. இறுதியில் துணைநூற்பட்டியல் இடம்பெற்றுள்ளன.

இயல் ஒன்று



# திருமுருகாற்றுப் படையில் பண்பாட்டுக் கூறுகள்

# இயல் ஒன்று

# திருமுருகாற்றுப்படையில் பண்பாட்டுக் கூறுகள்

ஆற்றுப்படை இலக்கியங்களில் முதலாவதாக அமைந்திருப்பது திருமுருகாற்றுப் படையாகும். பத்துப்பாட்டின் கடவுள் வாழ்த்து போல் திருமுருகாற்றுப்படை அமைகிறது. இப்பாடலை இயற்றியவர் நக்கீரர் ஆவார். முந்நூற்று பதினேழு அடிகளைக்கொண்டது இத்திருமுருகாற்றுப் படையில் உள்ள பண்பாட்டுக்கூறுகளை ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## திருமுருகாற்றுப்படை

முருகன் அருள்பெற்ற ஒருவன் அருள்வேண்டும் ஒருவனை ஆற்றுப்படுத்தும் வகையில் புதுமை நோக்கில் அருளுக்காக ஆற்றுப்படுத்துவது திருமுருகாற்றுப்படை நூல்ஆகும். பெரும்பாலும் ஆற்றுபடுத்துவோரின் பெயரிலேயே நூல்கள் அமைந்திருக்கின்றன. ஆனால், திருமுரு காற்றுப் படை யாரிடம் ஆற்றுபடுத்துகிறாரோ அவரின் பெயராலேயே திருமுருகாற்றுப்படை என வழங்கப்படுகிறது.

திருமுருகாற்றுப்படையில் காணப்படும் பண்பாட்டுக் கூறுகளை பின்வருமாறு கானலாம்.

### பொருள்சார் கூறுகள்

பண்பாடு என்பது தனிமனிதனை மட்டும் சார்ந்திருக்கவில்லை. தனி மனிதன், இனம், சமுதாயம் என்ற மூன்றையும் சார்ந்து உருவாகிறது. இனமும், சமுதாயமும் பண்பாட்டை வளர்க்கின்றன. இதன் வழியாக தான் மக்களின் பொருள்சார்ந்த கூறுகள் வெளிப்படும்.

### புழங்கு பொருட்கள்

புழங்கு பொருட்கள் என்பது தொழிற்சார்ந்த கருவிகள், இசைக்கருவிகள், ஆடைகள், அணிகலன்கள் போன்றவையாகும்.

### இசைக்கருவிகள்

பண்டைய தமிழ் மக்கள் தங்கள் மொழியைக் காணும் முன்பே ஒலியை இசையாகக் கண்டனர். இசையை இறைவனாகக் கண்டு போற்றினர்.இசையானது மக்கள் உள்ளத்தோடு பொருந்துதல் என்பது பொருளாகும்.தோற்கருவிகள், நரம்பிசைக் கருவிகளை இசைத்துள்ளனர்.

நரம்பு இசைக்கருவி

நரம்பு இசைக்கருவியான யாழினை கந்தருவர்கள் எண்ணும் விண்ணுலகத்து இசைப்பாணர்கள் திருவாவினக்குடியில் இசைத்தனர் என்பதை

முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்
செவிநேர்புத்த செய்வுறு திவவின்
நல்லியாழ் நவின்ற நயனுடைய நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்நரம்பு உளர

(திருமுருகு 139-142)

இந்த அடிகளின் வழியாக அறிய இயலுகிறது.

**தொண்டகச்சிறுபறை**

தொண்டகம் என்பது கருவியாகும். இது ஒரு சமூகத்தை சேர்ந்தோரின் பொருளாக உள்ளது. குறவர்கள் குரவைக்கூத்தின் போது முழங்கப்படுதலை.

தொண்டகச் சிறுபறைக்குரவை அயர

(திருமுருகு-197)

என்ற அடியில் அறியமுடிகிறது.

சிலப்பதிகாரத்தில் இதுபோல தொண்டகம் என்னும் பறையை குரவைக் கூத்தின் போது முழக்கியதை

தொண்டகந் தொடுமின் சிறுபறை தொடுமின்

(சிலப் குன்றக்குரவை)

என்ற அடி எடுத்துரைக்கிறது.[1]

**கொம்பு**

கொம்பு என்பது ஒருவகையான ஊது கருவியாகும், கொம்பு குழற்கருவியாக உள்ளது. கொம்பு என்பது மிருகங்களின் கொம்பில் துளைகளை இட்டு ஊதியுள்ளனர். இது பழமையான கருவியாகும்.[2]

கொம்புகள் மிகப்பழமை வாய்ந்தவை எனினும் அவை இன்றும் பழங்குடிமக்கள் நாட்டுப்புற மக்கள் ஆகியவரிடையே காணப்படுகின்றன. இவற்றிற்கு இந்தோ ஆரியமொழிகளில் சிருங்கம் என்னும் தமிழ் முதலிய திராவிடமொழிகளில் கொம்பு என்னும் பெயர்.[3]

கோர்வாய் வைத்துக்கொடுமணி இயக்கி

(திருமுருகு-246)

கொம்பினை ஊதுகின்றது ஒரு பக்கம் மணியினை அடித்து ஓசை எழுப்புகின்ற நிலை மறுபக்கம் என்று நக்கீரர் கூறுகிறார்.

**குழல்**

குழல் என்பது துளைக்கருவியாகும். குன்றுதோறும் ஆடல்புரியும் தன்மை கொண்ட முருகன் புல்லாங்குழலை வாசிப்பவன் என்பதை

குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்

(திருமுருகு-208)

இந்த அடி குழலினை இசைத்ததை குறிப்பிடுகிறது.

முதலில் மூங்கிலில் குழல் அமைத்த காரணத்தால் புல்லாங்குழல் என்ற பெயர் உண்டானது. இசைக்கருவிகளிலேயே மிகப் பழமையானது குழல் ஆகும்.[4] திருவள்ளுவர் கூறும்போது,

குழலினிது யாழினி என்ப தம்மக்கள்
மழலைச்சொல் கேளா தவர்

(குறள் 66)

குழல் என்னும் இசைக்கருவியை கூறியுள்ளார்.[5]

**பல்லியம்**

பல்லியம் என்னும் இசைக்கருவி வானத்தின் கண் வாழும் தேவர்களுடைய

இசைக்கருவியாகிய துந்துபியைக்குறிக்கும். முருகப்பெருமான் எழுந்தருளும்போது தேவர்கள் துந்துபி முழக்கிக் கொண்டு மகிழ்வார்கள் என்பதை,

அந்தரப் பல்லியம் கறங்க,..............

*(திருமுருகு-119)*

இந்த அடி வெளிப்படுத்துகிறது.

*முரசு*

முரசு என்பது போர்கருவியாகும். இந்த கருவியை முருகன் அருள் வழங்கும்போது முரசு முழக்கம்

உரம்தலைக்கொண்ட வரும் இடி முரசமொடு

*(திருமுருகு-121)*

இடி முழங்குவதுபோல ஒலியெழுப்பப்படுகிறது

பொருநராற்றுப்படையில் முரசு என்னும் கருவி பயன்பட்டதை

முரசு முழங்கு தானை, மூவரும் கூடி

*(பொருந-54)*

வெற்றி முரசு முழங்கும் மூன்று அரசரும் கூடி இருப்பது பெரும் நன்மையை நல்குவதாகும்.[6]

**வேல்**

வேல் என்னும் கருவி ஒரு முனையில் பரந்த நாக்கு போன்று நுனி கூர்மையுடன் காணப்படும்.

அகராதியில் வேல் என்னும் சொல்லுக்குப் பல பொருள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவைகளில் ஒன்று கைவேலைக் குறிப்பதாகவும், இன்னொன்று ஆயுதத்தின் பொதுபெயராகவும் குறிப்பிடப்பட்டுள்ளன. கப்பணம், தோமரம், குந்தம், கைவேல் ஆகியவைகள் கைவேலின் பெயர்களாக நிகண்டுகள் கூறுவதின் வாயிலாக அறியமுடிகிறது.[7]

**ஆடைகள்**

தமிழர்கள் தாங்கள் வாழும் நிலத்திற்கேற்ற ஆடைகளை அணிந்திருந்தனர். முருகன் குறிஞ்சி நிலக்கடவுள் ஆதலால்,இந்நூலில் மலைமகளிர் மற்றும் முருகனது ஆடை பற்றிய செய்திகளும் சூரரமகளிர், தெய்வமகளிர் தம் ஆடைச்சிறப்பும் காணப்படுகின்றன. தழையாடை, மலராடை, மரவுரி, தோலாடை, துகிலாடை, பட்டுடை ஆகியனவும் அணிந்திருந்தனர் என்பதை அறியமுடிகறிது.

**துகில்**

தமிழர் இழைகளால் ஆன துகிலாடையை நெய்து அணிந்துள்ளனர். முருகனை வணங்கும் சூரர மகளிர் அணிந்த ஆடையை கூறும்போது,

கோபத் தன்ன தோயாப் பூந்துகில்

(திருமுருகு -15)

அதாவது இந்திரகோபப் பூச்சியின் செந்நிறத்தை ஒத்தபூத்தொழிலையுடைய துகிலினை அணிந்திருந்தனர்.

**ஆவியன்ன துகில்**

முருகனைத் தொழுது வாழ்த்தும் கந்தருவப் பெண்டிர் புகையை முகந்து கொண்டாற் போல அழுக்கேறாத தூய்மையான உடை அணிந்திருந்தனர் என்ற பண்பினை

புகைமுகந் தன்ன மாசில் தூவடை

(திருமுருகு 138)

இந்த அடியில் குறிப்பிடப்படுகிறது. இதுபோல புறநானூற்றில் புகை போன்ற துகிலினை பயன்படுத்தினர் என்பதை

புகை விரிந்தன்ன பொங்குதுகில்

(புறம் 20)

என்னும் அடியில் துகில் ஆடையைப் பற்றி புறநானூறு குறிப்பிடுகிறது.[8]

**உரிவை**

உரிவை என்பது மரப்பட்டையால் செய்யப்பட்ட உடை ஆகும். இதனை முனிவர்கள் அணிந்திருந்தனர் என்பதை

சீரை தைஇய உடுக்கையர், சீரொடு

(திருமுருகு.126)

உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்

(திருமுருகு.129)

இந்த இரு அடிகளும் உணர்த்துகிறது. மரவுரியை இடுப்பிலும், தோலினை மார்பிலும் உடுத்தினார்கள் முனிவர்கள் என்பதை அறியலாம்.

இதுபோன்று நற்றிணையில் மலையில் வாழும் குறவர்கள் மரநாரினாலே பிண்ணிய உடையை உடுத்தியிருந்தனர் என்பதை

மரல் நார் உடுக்கை மலை உறை குறவர்

அறியாது அறுத்த சிறியிலைச் சாந்தம்

(நற் 64:4-5)

இந்த அடிகள் குறவர்களின் பண்பை வெளிப்படுத்துகிறது.[9]

**தழையாடை**

மலைநிலத்து மகளிர் முருகனை வழிபடும் முறைமையைக் கூறும் பொழுது தழையாடை அணிந்திருந்தது பற்றியும் கூறுகின்றார், ஆசிரியர் நக்கீரர். குறமகளிர்கள் தழை ஆடையை உடுத்தி தனது உடம்பினை மறைத்துக்கொண்டார்கள். தழை ஆடையை உடுத்தினால் உடம்பில் உள்ள சூடுதனியும் என்பதற்காக உடுத்திக்கொண்டார்கள் என்ற பண்பினை

முடித்தகுல்லை இலையுடை நறும்பூ

செங்கால் மராஅத்த வால் இணர் இடை இடுபு

சுரும்பு உணத்தொடுத்த பெருந்தன் மாத்தழை

திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ

மயில்கண் உன்ன மடநடை மகளிரோடு

(முருகு 201-205)

இந்த அடிகள் வாயிலாக அறிய முடிகிறது.

பட்டினப்பாலையில் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் பரதவகுலப் பெண்டிர் தழை ஆடையை உடுத்தியிருந்தனர் என்பதை

பைந்தழை மாமகளிரொடு

(பட்டி.பா.91)

என்ற அடியின் வாயிலாக தழையாடை மகளிர் அணிந்திருந்தனர் என்பதுதெரிகிறது.

**முருகனின் ஆடை**

முருகனின் ஆடையாக சிவந்த நிற ஆடையும், பட்டாடையும் முருகனுக்கு வழிபாட்டின் போது அணிவித்துயிருந்தனர் என்பது தெரிகிறது.

**சிவந்தநிற ஆடை**

சிவந்தநிற ஆடைக்கும் முருகனுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. முருகக் கடவுள் குறிஞ்சி நிலத்திற்குரிய கடவுள். குறிஞ்சி நில மக்கள் தங்களின் எண்ணத்திலும், செயலிலும் சிவப்பு நிறம் அதிகமாக பிரதிபலிக்கிறது அதனால் இறைவனுக்கும் சிவப்பு நிற ஆடையை உடுத்தியுள்ளமையை.

சிவந்த ஆடையன் செவ்வரைச்

(திருமுருகு-206)

இந்த அடியில் சுட்டப்பட்டுள்ளது

பட்டாடை

பண்டைய மக்கள் பட்டாடைகளை அழகுடன் நெய்தலையும் அதனை பயன்படுத்தும் முறையினையும் காண இயலுகிறது. முருகனை வழிபடும்போது பட்டாடைவைத்து வழிப்பட்டுள்ளார்கள்.

முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்

செந்நூல் யாத்து...................

(திருமுருகு 230-231)

என்ற அடியில் அறிய இயலும் இருபக்கமும் வெவ்வேறு நூலால் ஆன பட்டாடையை நெய்யும் முறையினை அறிந்தவராக பண்டைய தமிழர்கள் இருந்துள்ளனர்.

**அணிகலன்கள்**

அணி என்பது அழகு என்பதைக் குறிக்கும். அணிகலன்களை நன்கு நுட்பமான வேலை பாடுகளுடன் செய்து இறைவனுக்கும், மகளிரும் அணிந்திருந்தார்கள்.

**மகளிர் அணிகலன்**

மகளிர்கள் காதிலும், நெற்றியிலும் அணிகள் அணிந்தார்கள்.சூரரமகளிர் இயற்கையான தளிரால் ஆன ஆபரணங்களை பயன்படுத்தினர்.

*வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்*

*(முருகு 31)*

*என்பது புலப்படுகிறது. காதில் இந்த அணிகலனை அணிந்திருந்தார்கள்.*

***நெற்றி அணிகலன்***

*பண்டைய மகளிர்கள் நெற்றியில் அணிகலன்அணிந் திருந்ததை திருமுருகாற்றுப்படையின் வாயிலாக காண இயலுகிறது.*

*மகரப் படுவாய் தாழ மண்ணுறுத்து*

*(திருமுருகு.25)*

*சூரர மகளிர் மகரமீன் வாய் திறந்திருந்தால் எப்படி இருக்குமோ அதுபோன்ற வடிவிலான அணிகலனைத் தொங்கவிட்டிருந்தனர்.*

**இடையணிகள்**

*அணிகலன் அணியும் பழக்கம் பண்டைய மகளிரிடமும் இருந்துள்ளது.*

சூரரமகளிர் பல்வேறு மணிகளால் கோர்க்கப்பட்ட ஏழுவடமாய் உள்ள மேகலையை இடையில் அணிந் திருந்தனர்.

பல்காசு நிறைந்த சில்காழ் அல்குல்

(திருமுருகு-16)

என்பதை அறியமுடிகிறது.

**கால்அணிகலன்கள்**

சூரர மகளிர் காலில் சலங்கை அணியும் முறையை பின்பற்றியுள்ளனர்.

கிண்ணி கவைஇய ஒண்செஞ்சீரெடி

(திருமுருகு 13)

என்பதை இந்த அடிபுலப்படுகிறது.

**முருகக்கடவுளின் அணிகலன்கள்**

தலை முதல் கால் வரை அணிகள் அணிந்தனர். நன்கு வேலைபாடுகளுடன் கூடிய அணிகளை குறிஞ்சி நிலக்கடவுளான முருகனுக்கு அணிந்திருந்ததை காணலாம்.

**தலை ஆபரணங்கள்**

தலையில் உள்ள அணிகலன் ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடையதாகிய தாமம், மகுபன். பதுமம், கோடகம், கிம்புரி தொழில்திறம் முற்றிய தலையணிகலன் என்பதை

ஐவேறு உருவின் செய்வினை முற்றிய

முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி

(திருமுருகு 83-84)

திருப்பரங்குன்றத்தில் இருக்கும் முருகன் அணிந்திருந்தான் எனக் கூறுகிறது.

சிலப்பதிகாரத்தில் பொற்கொல்லன் பற்றிக்கூறும் போது மணமுடி முதல் கலன்கள் சமைப்பதில் சிறந்தவனாக இருந்தான் என்பதை

முடிமுதல் கலன்கள் அமைப்பேண்யான் என

(சிலம்பு 114)

என்ற அடி சுட்டுகிறது.[11]

**காதணிகள்**

முருகன் காதணி அணிந்திருந்ததை திருமுருகாற்றுப்படையில் கூறும்போது

நகைதாழ்பு துயல்வரூவம் வகைஅமை பொலங்குழை

(திருமுருகு.86)

பொன்னாலான ஒளிவீசுகின்ற அதிக வேலைப்பாடுகள் அமைந்த குழையினை அணிந்திருந்தான் என்பது அறியமுடிகிறது.

**கழுத்தில் அணியும்அணிகலன்**

கழுத்தில் தொங்கும் அணிகளாக முத்துமாலை, பொன்னரிமாலை போன்றவை குறிப்பிடப்படுகின்றன.

ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்

(திருமுருகு-104)

பொன்னாலும். முத்தாலும் ஆன மாலைகள் தங்கிய அழகிய பெருமைமிக்க மார்பினை உடையவன் முருகன் ஆவான்.

பொருநராற்றுப்படையில் கரிகாலச் சோழ மன்னன் தன்னை நாடி வந்த பாடினிகளுக்கு அணிந்துகொள்ள பொன்னரிமாலையும், முத்துமாலையும் சூடத்தருவான் என்பதை

வால்லுளி முத்தமொடு பாடினி அணிய

(பொருநா-162)

இந்த அடியில் விளங்குகிறது [12]

**தோளணிகள்**

தோளில் அணிகலன்களை ஆடவர், அரசன், வீரன் தொடி என்ற வீரம்

பொருந்திய ஆபரணத்தை அணிந்திருந்தார்கள். முருகன் ஆறு தலைகளும், பன்னிருகைகளும் செய்த செயலைக் கூறும்போது இவ்வகை ஆபரணத்தை அணிந்திருந்தான்

கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப

(முருகு-114)

குன்றுதோறாடல் பகுதியில் முருகன் குரவைக்கூத்து ஆடும்போது தொடி என்ற ஆபரணத்தை அணிந்திருந்தான்

தொடி அணி தோளன்

(திருமுருகு 211)

என்பது தெரிகிறது.

**அறிதல்சார் கூறுகள்**

ஒரு பண்பாட்டின் அறிதல்சார் கூறுகள் என்பவை அப்பண்பாட்டைச் சேர்நதவர்களின் அறிதிறன் கூறுகளைக்குறிக்கும்.[13] குறிஞ்சி நிலமக்கள் அவர்களது

வாழ்விலும், உலகத்தைபற்றியும், என்னென்ன அறிந்து கொண்டுள்ளனர். அவற்றை எவ்வாறு அறிந்துகொள்கின்றனர் என்பவையே அறிதல்சார் கூறுகளாகும்.

**மழை உருவாதல்**

மழை எப்படி உருவாகின்றது என்ற அறிவை பெற்றிருந்தனர். கடல் நீரினை முகந்து கொண்டு சென்று கரிய மேகங்கள் மழையினை பொழிந்தன என்பதை அறிந்தமையை

காா்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை

(திருமுருகு.6)

என்ற இந்த அடி விளக்குகிறது.

**நிறப்பண்பு அறிதல்**

குறிஞ்சி நிலத்தில் வாழும் குறவர்கள் வேட்டையாடும் தொழிலைச் செய்பவர்கள். அதனால் தான் வழிபடும் தெய்வத்திற்கும் சிவப்பு நிறத்திலேயே மலர்கள், ஆடை, உணவு என அனைத்தையும் பயன்படுத்திய பண்பு பிரதிபலிக்கிறது.

இருள்படப் பொதுளிய பராரை மராஅத்து

உருள்பூந்தண்தார் புரளும் மார்பினான்

(திருமுருகு 10-11)

குளிர்ச்சியான சோலையில் செங்கடம்பு மரத்தில் பூத்த வட்ட வடிவமான சிவப்பு மலர் மார்பிலே முருகன் அணிந்திருந்தான்.

**இயற்கை ஆடை:**

இயற்கையான மலர்களாலும், இலைகளாலும் ஆன ஆடையை மலைவாழ் மக்களான குறமகளிர்கள் தழை ஆடையை உடுத்தி தனது உடம்பினை மறைத்துக்கொண்டார்கள். தழை ஆடை உடுத்தினால் உடலில் உள்ள சூடு குறையும் என்பதை அறிந்தவராக இருந்தனர் என்பதை

செங்கால் மரா அத்துவால் இணர்இடை இடுபு

சுரும்பு உணத்தொடுத்த பெருந்தண் மாத்தழை

(திருமுருகு 202-203)

இந்த அடிகள் வெளிப்படுத்துகிறது.

**நெறியியல் கூறுகள்**

ஒரு பண்பாட்டின் நெறியியல் கூறுகள் எனப்படுபவை அம்மக்களின் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகளைக் குறிக்கும். விழுமியங்கள், நெறிமுறைகள், குடிவழக்குகள், வழக்கங்கள், பழக்கங்கள் முதலானவையாகும்.

**விழுமியங்கள்**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்வியலுக்கும் செயலுக்கும், நடத்தைமுறைக்கும் எவை எவை அவசியமென்று கருதப்படுகிறதோ அவையே பண்பாட்டின் விழுமியங்கள் ஆகும்.

முன்னே குறிக்கப்பட்ட நெறிகள் உயர்ந்த விழுமியங்களை அடியொற்றி ஒரு சமூகம் அமைக்கப்பட்டிருந்தால் அது சமூகத்தை வளர்க்கும். [14]

**குரவைக்கூத்து**

குரவை என்பது ஒருவகையான கூத்து ஆகும். குன்றுதொறு ஆடலில் இருக்கும் .முருகனின் கோபத்தைத் தக்கக் இந்த கூத்து நிகழ்த்தப்படுகிறது.

எழுவரேனும், எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைகோத்து ஆடும் கூத்து என்பர் .இதனை கண்டுகளிக்க முருகன் எழுந்தருளுகின்றான் என்பதை

குன்றகக் சிறுகுடிக்கிளையுடன் மகிழ்ந்து

தொண்டகச் சிறுபறைக் குரவை அயர

(திருமுருகு 196-197)

எனும் அடிகளின் வழியாக அறிய இயலுகிறது.

**வீரம்**

நாட்டினைக் காக்கும் மன்னனுக்கு அறமும், வீரமும் இருகண்கள் போன்ற ஆகும்.

வீரம் என்பது பண்டைய காலத்திலிருந்த இருந்த சமூக மதிப்பாக கருதப்படுகிறது.

செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்

கறவுகொள் நெஞ்சமோடு களம்வேட்டன்றே

(திருமுருகு 99-100)

என்னும் அடிகள் அடியவர்களுக்குப் பகைவரால் வரும் துன்பத்தினைப் போக்க போரில் வெல்லுகின்ற ஆற்றலைக் கொண்டவன் என்பதை அறியமுடிகிறது.

**சூரபன்மனை வெல்லுதல்**

மக்கள் வடிவும் விலங்கின் வடிவும் ஆகிய இரண்டு பெரிய வடிவங்கலந்து

ஒன்றாகிய சூரபதுமனின் உடல் அற்று வேறு ஆகும்படி செய்து, அவுணர்க்கு வெற்றிகிட்டாத வகையில் போர்புரிவதில் சிறந்தவன் கடல் நடுவே மாயையால் மாமரவடிவாக நின்ற சூரபதுமனை தன்னுடைய வேலால் கொன்ற சிறந்த வெற்றியையுடையவன் முருகன் என்பதை

*அவுணர் நல்வலம் அடங்சுக்கவிழ் இணர்*
*மாமுதல் தடிந்த மறு இல் கொற்றத்து*

*(திருமுருகு 58-59)*

*என்ற அடிகளின் வழியாக முருக்கடவுளின் வீரப் பண்பு புலப்படுகின்றது*

கலித்தொகையில் முருகனின் வீரத்தை கூறும்போது மாமரவடிவாக நின்ற சூரபதுமனை வேலால் கொல்வதில் வல்லவன் முருகன் என்பதை

மாகடல் கலக்குற மாகொன்ற மடங்கப்
போர்வெல் வல்லான்

*(கலி 13-14)*

*என்பதனை வெளிப்படுத்துகின்றன.*[15]

எவ்வளவு பெரிய வலிமையான பகைவனாக இருந்தாலும் அவனை அழிக்கின்ற சிறந்த தோள் வல்லமை உடையவன்

ஆரம்தாழ்ந்த அம்பகட்டு மார்பின்

செம்பொறி பொங்கிய மொய்ம்பின் சுடர்விடுபு

வண்புகழ் நிறைந்து வசித்துவாங்கு நிமிர்தோள்

(திருமுருகு 104-106)

என்ற அடிகள் முருகக்கடவுள் வீரத்தினை வெளிக்கொணர்கிறது.

**ஈகைபண்பு**

ஈகை என்பது ஒருவருக்கு தன்னுடைய மணமுவந்து ஒன்றை கொடுப்பது ஆகும். இத்தகைய பண்பினை திருமுருகாற்றுப்படையிலும் காண இயலும்.

திருமாலும், சிவனும், இந்திரனும், முப்பத்து மூன்று தேவர்களும், பதினொன் கணங்களும் வேண்டியவர்களுக்கு வேண்டியதைத் தரும் முருகனை நாடி பிரமனை விடுவிக்க வேண்டி முருகனிடம் வேண்டியதை பெற்றுச் செல்கின்றனர்.

நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு

ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்

(திருமுருகு 167-168)

உறுகுறை மருங்கில்தம் பெறுமுறை கொண்மார்

(திருமுருகு 173)

என்ற அடிகள் முரகனின் கொடைப் பண்பினை உணர்த்துகிறது.

**வழக்காறுகள்**

ஒரு சமூக மக்களிடம் காலம் காலமாக சில முறைகள் கடைபிடிக்கப்பட்டு அந்த முறையிலேயே வழிபாடு நடத்தும்போது மக்களிடம் வழக்காறுகள் காணப்படுகின்றன. வெறியாட்டு ஆடும்போது வேலன் மீது தெய்வம் இறங்கி ஆடுவதாக நம்பப்பெற்றது.

**பழக்கங்கள்**

பண்டைய தமிழ் மகளிர்கள் தாங்கள் வழிபடும் முறையிலும் தங்களை அலங்கரித்து கொள்வதிலும் சில பழக்கங்களை பின்பற்றியுள்ளார்கள்.

**திலகம் இடுதல்**

சூரர மகளிர் நெற்றியில் திலகம் இட்டு கொள்ளும் பழக்கம் அவர்களிடம் இருந்துள்ளது

திலகம் தைஇய தேம்கமழ் திருதுதல்

(திருமுருகு-24)

பழக்கத்தை இந்த அடி குறிப்பிடுகிறது.

**வழக்கங்கள்**

பழந்தமிழர்கள் வழக்கமாக சில முறைகளை வழிபாட்டில் பின் பற்றியுள்ளனர்

.

**குறிகேட்டல்**

வெறியாடு களத்தில் வேலன், கட்டுவிச்சி ஆகியோரிடம் வெறியாட்டு நடத்தித் தம் குறைகுறித்துக்கேட்டலைப் வழக்கமாகக் கொண்டிருந்தனர். வெறியாட்டு களத்தில் மலர்தூவி நறுமணப்புகை, நறுஞ்சாந்தம் பரப்பி வெறியாட்டு நடத்தும்போது முருகன் வேலன் மேல் எழுந்தருளி அம்மக்கள் குறைதீர்க்க நற்சொல் சொல்வதை

பைங்கொடி நறைக்காய் இடையிடுபு வேலன்
அம்பொதிப் புட்டி விரைஇக் குளவியோடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்
நறுஞ்சாந் தணிந்த கேழ்கிளர் மார்பின்

(திருமுருகு 190-193)

இந்த அடிகள் வழக்கத்தை விளக்குகின்றன.

**பலியிடுதல்**

பண்டைத் தமிழர்களிடம் தெய்வங்களுக்கு உயிர்களைப் பலியிட்டு வணங்கும் வழக்கம் இருந்தது. முருகனுக்கு ஆடுவெட்டிப் பூசைபோடுதல் அக்கால வழக்கமாகும்.

மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்

குருதியொடு விரைஇய தூவெள்ளரிசி

சில்பலிச்செய்து, பல்பிரப்பு இரீஇ

(திருமுருகு 232-234)

மிகுந்த வலிமை பொருந்திய பெரிய கால்களையுடைய கொழுத்த ஆட்டுக்கடாவை வெட்டுவார்கள். அதன் குருதியுடன் தூய வெள்ளையான அரிசியைக் கலந்து, அவைகளை பிரப்பங் கூடைகளிலே வைத்து முருகனைப் பூசிப்பது வழக்கமாகும்.

முருகனுக்கு சிறந்த விழாக்களை ஊர்கள் தோறும் செய்வர். சிறியதினை அரிசியை மலரோடு கலந்துவைத்தும் கோழிக் கொடியோடு முருகனை வரிசையாக நிறுத்தியும் வழிபாடு செய்துள்ளனர் என்பதை (திருமுருகு 218-220)அடிகளில் அறிய முடிகிறது.

**தடுப்பு அமைத்தல்**

குற மகளிர்கள் பேய் முதலியன வராமல் இருக்க நெய்யையும், வெண்சிறுகடுகையும் அப்புதலை வழக்கமாக கொண்டிருந்தனர் என்பதை

நெய்யோடு ஐயவி அப்பி, ஐதுவரைத்து

(திருமுருகு 228)

இந்த அடியில் வெளிப்படுகிறது. இதுபோல சங்க இலக்கியமான நெடு நல்வாடை, நற்றினையின் பாடல் அடிகள் எடுத்துரைக்கின்றன.

ஐயவிஅப்பிய நெய்யணி நெடுநிலை

(நெடுநல்வாடை 86)

அக்காலத்து வழக்கம் தெரிகிறது [16]

வெறியாட்டு நடைபெறும் முன்பு கையில் சிவப்பு நிற நூலால் காப்பு கட்டிக்கொள்ளும் வழக்கத்தை பின்பற்றியுள்ளனர் என்பதை (திருமுருகு 231)அடியில் கூறப்பட்டுள்ளது.

**நெறிமுறைகள்**

நெறி என்பது வழிப்படுத்துவதுஆகும். ஒவ்வொரு சமூக மக்களிடமும் சில வகையான நெறிமுறைகள் பின்பற்றும் பண்புடையவராக இருந்தார்கள் பண்டைய தமிழர்கள்.

**மகளிர்வழிபாடு**

குறமகள் வழிபாட்டிற்கு உரிய இடத்தை தூய்மையாக்கி அந்த இடத்தில் வழிபாடு செய்யும் முறையினை அறிந்தவர்களாக இருந்தனர்.

**துதித்து வழிபடுதல்**

கடவுளைப் பல பெயர்கள்கூறித்துதித்து வணங்குதல் வழிபாட்டு

நெறிமுறைகளுள் ஒன்றாகும். முருகனது பல பெயர்களை துதித்து வழிபாடு செய்தது குறிப்பித்தக்கது ஆகும்.

அறுவரும் பயந்த ஆறமர் செல்வ

ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை

...................................................

வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ

........................................................

.........................................................

மாலை மார்ப ! நூலறி புலவ

(திருமுருகு 255-261)

இப்பகுதியில் கூறியதை துதித்து வழிபட்ட பண்பினை காணமுடிகிறது.

## தொகுப்புரை

* பண்டைய மக்கள் இசைக்குஅதிக முக்கியத்துவம் கொடுத்து இசைக்கலையை செம்மையாக வளர்த்துள்ளார்கள்.

* குறிஞ்சி நிலத்திலே வாழ்ந்த குறவர்கள் வேட்டையாடும் தொழிலைச் செய்ததால் அதிலிருந்து புழங்கு பொருட்களை உருவாக்கிபயன்படுத்தினார்கள் என்று தெரிகிறது.

* ஆடைகள் இயற்கையான முறையிலேயே தழையாடை, மலராடை அணிவதால் உடல் குளிச்சியாக இருக்கும் என்றஅறிதல் பண்புடையவராக இருந்தனர்.

* இறைவனை மகிழ்விக்கும் வகையில் விழாக்களை நடத்தினார்கள் பண்டைய தமிழர்கள் என்பதை அறியலாம்.

* வெறியாட்டு என்னும் விழா நடத்தும் வழக்கம் இருந்துள்ளன.

* முருகக்கடவுள் வேலன்மீது இறங்கி அருள்கூறுவதாக மக்களிடம் நம்பிக்கை காணப்படுகிறது.

* முருகனிடம் அருள் பெற்றவர்கள், அருள் பெற இருப்பவர்களை ஆற்றுப்படுத்துகின்றனர்.

## சான்றெண் விளக்கம்

1. வ.த. இராமசுப்பிரமணியம், சிலப்பதிகாரம் மூலமும் உரையும், ப.426

2. டி.எஸ். பார்த்தசாரதி, இசைக்கருவிகள் ப.89

3. மேலது ப.90

4. வெற்றிச்செல்வன், இசையியல் ப.58

5. மு. வரதராசனார், திருக்குறள் தெளிவுரை ப.15

6. இரா. மோகன், பத்துப்பாட்டு முதற்பகுதி .ப.82

7. வே.சா. அருள்ராசு, பழந்தமிழகத்தில் இரும்புத் தொழில்.ப.36

8. சங்க இலக்கியம் புறநானூறு, ப.874

9. கு.வெ. பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் வரையும் ப.113

10. வி. நாகராசன், பட்டினப்பாலை ப.91-92

11. ஞா. மாணிக்கவாசகன், சிலப்பதிகாரம் தெளிவுரை ப.292

12. இரா. மோகன், சங்க இலக்கியம் முதற்தொகுதி ப.87

13. பத்தவசலபாரதி, பண்பாட்டு மானுடவியல் ப.158

14. தாய்ம்மாள் அறவாணன், தமிழ்ச்சமூகவியல் ப.15

15. அ. விசுவநாதன், கலித்தொகை மூலமும் உரையும் ப.460

16. பத்துப்பாட்டு இரண்டாம்பகுதி மூலமும்உரையும் ப.180

# இயல் இரண்டு

## பொருநராற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள்

ஆற்றுப்படை இலக்கியங்களில் இரண்டாவதாக அமைவது பொருநராற்றுப் படையாகும். பெண்பாற்புலவரான முடத்தாமக் கண்ணியார் கரிகாற் பெருவளத்தான் புகழினையும், சிறப்புகளையும் அவனுடைய பண்பு நிலைகளையும் பொருநர் வாயிலாக வெளிப்படுத்தியிருக்கிறார். இவற்றை கண்டறிவதே இவ்வியலின் நோக்கமாகும்.

**ஆற்றுப்படை**

ஆற்றுப்படை என்பது சங்கச்சான்றோர்பாடிய பாட்டு வகைகளுள் ஒன்றாகும். பரிசில் பெற்ற ஒருவன் பரிசல் வேண்டிய ஒருவனை ஆற்றுப்படுத்துவது ஆகும்.

ஆற்றுப்படையாவது ஆற்றின்கண்படுப்பது ஆறு என்பது வழி, படுப்பது செலுத்துவது அதாவத ஒருவர் செல்ல வேண்டிய வழிதுறைகளைச் சொல்லித் தெரிவிப்பது ஆகும்.[1]

ஆற்றுப்படை என்னும் இத்துறை உலகில் அறப்பண்பு மிக்கு வறியார்க்குத் தம்பால் உள்ளன எல்லாம் உவந்து ஈயும் வள்ளல்களைப் புகழ்ந்து பாடுதற்கென நல்லிசைப்புலவர்கள் வகுத்துக்கொண்ட ஒரு புலனெறியவழக்கமாகும்.

### பொருநராற்றுப்படை

பரிசு பெற்ற பொருநர், பரிசுபெற இருக்கும் பொருநரை கரிகாற் பெரு வளத்தானிடம் சென்று பரிசு பெறுமாறு வழிப்படுத்துவது ஆகும்.

### பொருள்சார்கூறுகள்

மக்கள் அவர்களின் பயன்பாட்டிற்காக ஏற்படுத்திக்கொள்ளும் அனைத்துப் பொருள்களும் பொருள்சார் கூறுகள் எனப்படும். தமிழர்களின் பயன்பாடுகளின் வழியாக அவர்களின் பண்பாட்டினை வெளிக்கொணர முடிகிறது.

பொருள்சார் பண்டங்களும், திறமைகளும் குறியீட்டுச் செய்கைகளும், நம்பிக்கைகளும் அறிவும் அதனை விவரிக்கும் முறைகளும், சமூக அமைப்பின் மூலக் கூறுகளும் சமூக மதிப்பீடுகளும்தான் பண்பாட்டில் அடங்கியுள்ள துணைக்கருவிகள் என்பர் பால்சன்.[2]

### புழங்குபொருட்கள்

பண்டைய கால மக்கள் பயன்படுத்திய ஒவ்வொரு பொருட்களுமே புழங்குப்பொருட்கள் எனலாம். அது மக்களின் பண்பாடு, பழக்கவழக்கங்களை எடுத்துக்காட்டக்கூடியது மக்கள் வாழ்வில் பயன்படுத்தும் கலங்கள், கருவிகள், அணிகலன்கள், ஆடைகள், இசைக்கருவிகள் போன்றவற்றைப் புழங்கு பொருட்கள்

எனலாம். பழக்கவழக்கங்களை எடுத்துக்காட்டக்கூடியது மக்கள் வாழ்வில் பயன்படுத்தும் கலங்கள் , கருவிகள் அணிகலன்கள், ஆடைகள், இசைக்கருவிகள் போன்றவற்றைப் புழங்கு பொருட்கள் எனலாம்.

**கலங்கள்**

கலங்கள் என்பது பாத்திரத்தைகுறிக்கும். பொன்வட்டில் நிறையப் பொருநர்க்கு கள்ளை வார்தது மகளிர் தந்தை

இழையணி வனப்பின் இன்நகை மகளிர்

போக்குஇல் பொலங்கலம் நிறையப் பல்கால்

வாக்குபுர தரத்தர................................

(பொருந 85-87)

என்னும் அடிகள் உணர்த்துகிறது. பொருநர்கள் மனம் நிறையும் அளவிற்கு பெறுதற்கரிய பொற்கலத்திலே பூமணம் கமழ்கின்ற கள்ளின் தெளிவை மன்னன் கொடுத்த பண்பினை

பெறல்அருங்கலத்தில் பெட்டாங்கு உண்க

(பொருந.156)

இந்த அடி வெளிப்படுத்துகிறது.

**நெற்கூடுகள்**

சாலி நெல்வகைகளுள் ஒன்று. இதனை அதிகமாக விளைய வைத்துள்ளார்கள் பண்டைய தமிழர்கள் என்பதை

தாழ்தாழைத் தன் தண்டலை
கூடு கெழிஇய குடிவயினான்

(பொருந.181-182)

நெற்கூடுகளில் நெல்லினை சேகரித்து வைத்திருந்தன் வாயிலாக புழங்கு பொருளாக நெற்கூடுகள் இருந்ததை அறியமுடிகிறது.

**அரிவாள்**

தமிழர்கள் தாங்கள் பயிர்களின் விளைச்சலை அறுவடை செய்வதற்காக ஒருவகை கருவியைப் பயன்படுத்தினர். அக்கருவியே அரிவாள் எனப்படும்.[3]

பயிர்த்தொழிலுக்கு இரும்பின் பயன்பாடு இன்றியமையாததாகும். நன்றாக விளைந்த நெற்கதிர்களை அறுவடை செய்யும் தொழிலையும் அக்கால மக்கள் மேற்கொண்டிருந்தனர்.

கூனி குயத்தின் வாய்நெல் அரிந்து

(பொருந.242)

என்பதை அடிகள் உணர்த்துகின்றன. உழத்தியர் தம் உடல் வளைந்து குனிந்து நின்று

அரிவாளின் வாயால் முதிர்ந்து விளைந்த நெற்றாளை அரிந்தனர்.

குயம், குளிர், கூர்வாள் ஆகிய பெயர்கள் அரிவாள் என்னும் கருவிக்கு வழங்கப்படுவன ஆகும்.

## இசைக்கருவிகள்

'இசைக்கு மயங்காத உயிர்களே இல்லை' எனக் கூறுவார் சான்றோர்கள். இசை என்பது ஒருவகையான அமைதியான உணர்வினை ஏற்படுத்தக்கூடியது. பண்டைய காலத்தில் இசைக்கலை மிகவும் உயர்ந்த நிலையில் இருந்துள்ளது.

இசைக்கருவிகள் பல இருந்தன என்பதனை பொருநராற்றுப்படையும் கூறுகிறது. இசைக்கருவிகளான யாழ், தடாரி, முழவு போன்றன பண்டைய தமிழர்களின் புழங்கு கருவிகளாக இருந்துள்ளன.

### யாழ்

நரம்புக்கருவிகளில் மிகச் சிறப்பிடம் கொண்டதாக யாழைக்கருதலாம். அதற்கு ஒரு நல்லவரலாறும் உள்ளது. அழகான உருவும் இனிமையான இசையும் பெருமைக்கும் சிறப்புக்கும் காரணமாக அமைகின்றன.

'யாழும், குழலும், தமிழகத்தில் தோன்றிய தொன்மையான இசைக்கருவிகளாகும். அவைகளின் தெய்வீகத்தன்மை வாய்ந்தவைகளாக இன்பச் சுவைதருபவைகளாக உயரிய கருவிகளாக போற்றப்பட்டுள்ளன.'[4]

யாழ் என்பது நான்கு வகைப்படும். அவையாவன பேரியழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்பன ஆகும். இந்நால்வகை யாழ்களில் ஒவ்வொரு யாழின் நரம்புகளின் எண்ணிக்கையும் மாறுபடுகின்றன.

யாழ் வாயினால் பாடிக்கொண்டே கையினால் மீட்டுவதற்கேற்ற கருவியாய்த் திகழ்நதது. பண், பற்று. பாணிஎன்ற மூன்றையும் ஒருங்கே இசைக்கவல்ல ஏற்றம் பெற்ற இசைக்கருவியாய் இது விளங்கிறது.[5]

யாழின் இசையினை கேட்டு கொடிய மனமுடைய கள்வர்கள் கூட தங்கள் ஆயுதங்களை துறந்துவிட்டு, இசையுடன் மகிழ்ந்தபண்பினை

ஆறலை கள்வர் படைவிட அருளின்

மாறுதலை பெயர்க்கும் மருஇன் பாலை

(பொருந.21-22)

என்னும் அடிகள் யாழின் தன்மையை வெளிப்படுத்துகிறது.

பாணர்களும், பாடினிகளும் பயன்படுத்திய பாலையாழ் எத்தகைய அழகுடன் இருந்தன என்று கூறுவதிலிருந்து அதன் அமைப்பினை அறிய முடிகிறது. பாலை யாழினை மணப்பெண்ணை போல அலங்காரமாக உள்ளது

குளப்புவழி அன்ன கவடுபடு பத்தல்

விளக்கு அழல் உருவின் விசியுறு பச்சை

அய்யா இளஞ்சூல் செய்யோள் அவ்வாயிற்று

ஐதுமயிர் ஒருகிய தோற்றம்போலப்

பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை

அளைவாழ் அலவன் கண்கண்டன்ன

துளைவாய் தூர்ந்த துரப்பமை ஆணி

(பொருந 4-10)

இதே போன்று சிலப்பதிகாரத்திலும் யாழ் பற்றிய செய்திகள் உள்ளன என்பதை

யாழும் குழலும் சீரும் மிடறும்

(அரங்.காதை 26)

யாழிசை, குழலின் இசை ஆகியவற்றோடு இயைந்த சிறப்புடைய வாய்பாட்டும், மெலிந்து எழுப்பும் மத்தள இசையும், ஆடுகின்ற ஆடலுக்கும், பாடும் பாடலுக்கும் ஏற்ப ஒருங்கிணைந்து வாசிக்கும் திறனுடையவராய் இருந்துள்ளனர்.[6] கலித்தொகையில் யாழினை பற்றிய குறிப்பு

ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை

யாழுளே பிறப்பினும் யாழ்ச்சுவை தாமென்செயுயம்

காணப்படுகிறது. (கலி 9:18-19)

**முழவு**

பண்டைய காலத்தில் பயன்படுத்திய தோற்கருவிகளுள் ஒன்று முழவு ஆகும். முழவு என்பது ஏழுவையாக உள்ளன என்றும் குறிப்பிடுகின்றனர். முழவு என்ற சொல்லுக்குத் தடாரி, குடமுழா வீர மத்தளம், மத்தளம் முரசு, பறை, தண்ணுமை என்று பொருள் கூறுகின்றனர்.[7]

மண் பாணைகளில் தோல போர்த்தி செய்யப்படும் கருவிதான் முழவு ஆகும். மார்ச்சனை என்ற பெயராலும் இந்தக் கருவி வழங்கப்படுகிறது என்பதை

மண் அமை முடிவின் பண்அமை சீறியாழ்

(பொருந 109)

இந்த அடியால் அறியமுடிகிறது. விறலியர் குழுவின் தாளத்திற்கு ஏற்ப சிறப்பாக ஆடியுள்ளனர்.

கொங்கு நாட்டில் மட்பானைகளில் தோல் போர்த்திச் செய்யும் தோற்கருவிகள் சில வழக்கில் உள்ளன. மண் மேளம், மொடா மத்தளம், மொடா மேளம் முதலிய தோற்கருவிகள் மிகப் பழமையானவை என்பது

குறிப்பிடத்தக்கதாகும்.[8]

இதேபோல சிலப்பதிகாரத்தில் புகார் நகரத்தில் இந்திரவிழா நடைபெறும்போது நகரத் தெருக்களில் இடையறாது முழவு முழங்கியது.

எண்ணருஞ் சிறப்பின் இசை சிறந்தொருபால்

முழவுக் கண் துயிலாது முழக்கரு வீதியும்

விழவுக்களி சிறந்த வியலுளாங்கண்

(இந்திர-காதை 185-188 வரி)

என்பதை இந்த அடிகளின் வாயிலாக திறம்பட தெரிகிறது.[8]

தடாரி

தடாரி என்னும் இசைக்கருவி தோற்கருவிகளுள் ஒன்ற ஆகும். பாம்பின் படத்தின் உள்ள பொறி போன்று கைவடுப்பட்டுக்கிடந்த கண் அகன்ற தடாரியில் தோற்றுவித்த தாளத்திற்க ஏற்ப பாடினி பாடத்தொடங்கினாள் என்பது தடாரி அவர்களின் புழங்குபொருட்களாக இருந்தன என்பதை

பைத்த பாம்பின் துத்தி ஏய்ப்ப

கைச்சசடு இருந்த என் கண்அகன் தடாரி

(பொருந-69)

என்ற அடிகள் தடாரி என்னும் கருவியை பயன்படுத்தியதை குறிப்பிடுகிறது.

**ஆடைகள்**

பண்டையத் தமிழர்கள் தங்களின் வாழ்வுக்கும் சூழ்நிலைக்கும் தகுந்தவாறு ஆடைகளைப் பயன்படுத்தியுள்ளனர். உடை ஆடை என்ற இரண்டு சொற்கள் பயன்படுத்தப் பெற்றுள்ளன. உடு எனும் வேர்ச்சொல்லிருந்து உடுத்துதல் வந்துள்ளது.

தமிழரின் தொன்மையான ஆடை தழையாடையாகும். பொருள்சார்ந்த பண்பாட்டு வழியாக காணும் போது ஆடைகளும் அக்கால மக்களின் பண்பட்ட நிலையினை வெளிப்படுத்துகிறது.

வாழ்வுக்கும் வளமைக்கும் ஏற்றாற்போல பட்டாடைகளையும், நுண்ணிய வேலைபாடுகளுடன் ஆடையையும், பொருநர்நைந்த பல நூல்களால் தைக்கப்பட்ட ஆடையையும் அணிந்துள்ளனர்.

**பட்டாடைகள்**

கரிகாலச்சோழன் உயர்ந்த தரமான பட்டாடைகளை பயன்படுத்துள்ளனர். இத்தகைய ஆடையை கலைஞர்களுக்கும் வழங்கியதை

நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுஉரி அன்ன அறுவை நல்கி

(பொருந 82-82)

இந்த அடிகளின் வாயிலாக அறிய இயலுகிறது. நுட்பமாக நெய்யப்பட்டிருந்த பூத்தொழிலை உடையதாய், பாம்பின் தோலினை போன்ற மென்மையான ஆடையை கலைஞர்களும் பெற்று மகிழ்ந்து பண்பாட்டினை காணலாம்.

**அணிகலன்**

பண்டையத்தமிழர்கள் அணிந்திருந்த அணிகலன் வாயிலாக அவர்களின் வளமையையும், பண்பாட்டு நிலையினையும் வெளிக்கொணர முடிகிறது.

மகளிர்கள் தலையில் அணிகலன் அணிந்திருக்கின்றனர் என்பதை பொரு நராற்றுப்படை

இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்

(பொருந.85)

என்ற அடி உணர்த்துகிறது.

தொல்காப்பிய பொருளதிகாரத்தில் களவியியலில் ஐயம் களையும் கருவியாக கூறும்போது இழை என்பது அணிகலனைக்குறிக்கும் என்கிறார்.[10]

**பொன்னரிமாலை**

கரிகாலன் தன்னை நாடிவந்த பாடினிகளுக்கு அணிந்துகொள்ள பொன்னரிமாலையை வெள்ளிய முத்துமாலையொடு சூடத்தருவான் . பாடினி

அதனை அணிந்து அழகு செய்வாள்,

வால்ஒளி முததமொடு பாடினி அணிய

(பொருந-162)

என்பதை அறிய முடிகிறது.

**அறிதல்கூறுகள்**

அறிதல் என்பது மக்களின் வாழ்க்கையுடன் தொடர்புடையது ஆகும். பண்டைய தமிழ்மக்களிடம் அறிதல் என்பது மிகுதியாக இருந்தன என்பதை அவர்களின் வாழ்க்கை நிகழ்வு வழியாக வெளிப்படுவதின் வழி உணர முடிகிறது.

ஒரு பண்பாட்டின் அறிதல்சார் கூறுகள் என்பவை அப்பண்பாட்டைச் சேர்ந்தவர்களின் அறிதிறன் கூறுகளைக் குறிக்கும். சுருங்க்கூறின் உலகத்தைப் பற்றியும் உலகியலுள்ள ஒவ்வொரு பொருளைப் பற்றியும், வாழ்க்கையைப் பற்றியும் மக்கள் என்னென்ன அறிந்துகொண்டுள்ளனர் அவற்றை எவ்வாறு அறிந்து கொள்கின்றனர் என்பவையே அறிதல்சார் கூறுகளாகும்.[11]

**வானிலை அறிதல்**

பண்டைய மக்கள் வானிலையை நன்கு அறிந்தவராக இருந்துள்ளனர். அதனால் தான் தங்கள் வாழ்வில் பயன்படுத்தும் பொருட்களுக்கு உவமைகளாக

கையாண்ட பண்பாட்டினை

எண்நாள் திங்கள் வடிவிற்று ஆகி

அண்நா இல்லா அமைவரு வறுவாய்

(பொருந.11-12)

யாழின் ஒரு பகுதியை கூறும்போது அமாவாசை கழிந்த எட்டாம் நாளில் நிலவு அரை வெண்ணிலாவாக இருக்கும் அதுபோல பத்தலின் தண்டினைச் சார்ந்த மேற்பகுதி உள்ளது என கூறுவதின் வாயிலாக உணரமுடிகிறது.

**நம்பிக்கை**

பண்டைய தமிழர்களிடம் நம்பிக்கைகள் என்ற பண்பாடும் இருந்துள்ளது. அவர்கள் தாங்கள் முற்பிறவியில் செய்த வினைதான் இப்பொழுது ஒரு செயல் நடைபெற காரணம் என்ற நம்பிக்கையுடையவராக இருந்தவர்கள் என்பதை

கோடியர் தலைவி கொண்டது அறிந!

அறியாமையின் நெறிதிரிந்து ஓராஅது

ஆற்றுஎதிர்ப் படுதலும் நோற்றதன் பயனே

(பொருந 57-59)

இந்த அடிகளின் வாயிலாக கூத்தர்களுக்கு தலைவனே! பிறரது நிலையினை

குறிப்பால் அறியக்கூடியதில் சிறந்தவனே, நாங்கள் வழியக்கூடியதில் சிறந்தவனே, நாங்கள் வழியறியாமையானே வேறு வழிபற்றிப் போகமல் இவ்வழியே வந்து எங்களை இவ்வழியிடத்தே காண்டலும்நீ முற்பிறப்பிற் செய்த நல்வினையின் பயனே ஆகும்.

**நெறியியல் கூறுகள்**

ஒரு பண்பாட்டின் நெறியியல் கூறுகள் எனப்படுபவை அம்மக்களின் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகளைக் குறிக்கும்.[12]

ஒரு சமூகத்தில் வாழ்பவர்கள் தங்களுக்குள்ளோ அல்லது பொதுவாக அனைவருக்கும் பயன்படும் வகையில் ஏற்படுத்திக்கொள்ளும் விதிமுறைகள், விழுமியங்கள் பழக்கவழக்கம், மரபுகள், நெறிமுறைகள் நம்பிக்கைகள் போன்றவை நெறியியல் கூறுகளை சார்ந்து அமைவன ஆகும்.

**விழுமியங்கள்**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்வியலுக்கும் செயலுக்கும், நடத்தை முறைக்கும் எவை எவை அவசயமென்று கருதப்படுகிறதோ அவையே அப்பண்பாட்டினரின் விழுமியங்கள் ஆகும்.[13]

ஒவ்வொரு பண்பாடும் குறிப்பிட்ட விழுமியங்களுக்கு முக்கியத்துவம் தருகிறது .பண்பாடுகளில் எண்ணற்ற கூறுகள் இருப்பினும் அறம்செய்தல் கொடை நீதிக்குக் கட்டுப்படுத்தல் கடவுள் வழிபாடு மதிப்புகளாக கருதப் படுகின்றன.

பொருட்களை அவர்களின் தேவைக்கு ஏற்பவும் அதிகமாகவும் வழங்கினான்.

**கொடை**

கொடை என்பது ஈகை என்பதைக் குறிக்கும், திருவள்ளுவர் கூறும்போது

வறியார்க்கொன்று ஈவதே ஈகைமற்றெல்லாம்
குறியை தீர்ப்பை நீர துடைத்து

(குறள் 221)

அதாவது இல்லாதவர்களுக்கு ஒரு பொருளைக் கொடுப்பதுதான் கொடையாகும்.[13] மற்றவர்களுக்குக் கொடுக்கும் கொடையெல்லாம் பானை எதிர்பார்க்கும் தன்மையை ஒத்தன ஆகும்.[14]

அதுபோல சோழன் கரிகாற் பெருவளத்தான் பிறரது நிலையினை அறிந்து உதவுவதில் சிறந்தவன். அதுபோல பொருநர்களின் வறுமை நிலையை கண்டு உணவு உடை பரிசு வழங்குவர் .

**உணவு வழங்கல்**

ஒருவரின் பசியை தீர்க்கும் கொடையானது மிகவும் உயர்ந்தது. தானத்தில் சிறந்தது அன்னதானம் என்பர். அத்தானத்தில் பொருநர்க்கு வழியில்

ஏற்பட்ட களைப்புதீர கள்ளினை அளித்து மகிழச் செய்தான் என்பதை

போக்குஇல் பொலங்கலம் நிறையப்பல்கால்

வாக்குபு தரத்தர வருத்தம் விட

ஆர உண்டு

(பொருந 86-88)

என்ற பாடல் அடிகளின் மூலம் விளக்குகிறார்.

இரவலனாகிய பொருநருக்கு செம்மறி ஆட்டு கறியையும், அவை வெறுத்துப்போயின் இனிய சுவையுடைய பல்வேறு பலகாரங்களையும் கொடுத்த சிறப்பினை உடைய சோழன் என்பது

துராஅய் துற்றிய துருவைஅம் புழுக்கின்

பராஅரை வேவை பருகு எனத்தண்டி

காழின் சுட்ட கோழிஊன் கொழுங்குறை

.........................................................

வேறுபல் உருவின் விரகுதந்த இரீஇ

(பொருந 103-108)

என்ற பாடல் வழியாக வெளிப்படுகிறது.

**உடை வழங்கல்**

*கரிகால மன்னன் இரவலர்களின் முககுறிப்பினைக் கண்டே அவர்கள் எத்தகைய இயல்புடன் வந்திருக்கிறார்கள் என்பதை அறியக் கூடியவன்,அத்தகைய இயல்பு நிறைந்தவன் என்பதை*

கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி

வேளாண் வாயில் வேட்பக்குறி

*(பொருந 74-75)*

*என்னும் அடி உணர்த்துகிறது.*

*இரவலர்களின் கந்தல் ஆடையைக் கண்டதும் நன்கு பூ வேலைப்பாடு அமைந்த பாம்பின் தோலை ஒத்திருந்த புதுப்பட்டாடையை கொடுத்தான் கரிகாலன் என்பதை*

நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து

அரவுவரி அன்ன அறுவை நல்கி

*(பொருந 82-83)*

*பொருநரின் வாய்மொழி வழி கரிகாலனின் கொடைச் சிறப்பினை அறிய முடிகிறது.*

**உறையும் பரிசிலும் வழங்கல்**

பழங்காலத்தில் இரவலர்களுக்கு பல பரிசுகளை வழங்கி தங்களின் கொடைப்பண்பினை இயல்பினை வெளிப்படுத்தியுள்ளார். தம்மை நாடி வந்த இரவலர்களுக்கு தங்கி துயில் கொள்வதற்கு ஏற்ற இடத்தினை அளித்தான் கரிகாலன் என்பதை

> ....................................மற்றஅவன்
>
> திருக்கிளர் கோயில் ஒருசிறைத் தங்கி
>
> (பொருந 89-90)

என்ற அடிகளின் வழி அவனின் மாண்பினை உணர்த்துகிறார் ஆசிரியர். மேலும் பொருநன் ஊருக்குப் புறப்படும்போது கன்றுகளோடு பிடிகளையும், களிற்று யானைகளையும், ஆடை அணிகலன்களையும் அவர்களுக்கு தந்து சிறப்பித்தவன் கரிகாலன் என்பதை

> துடிஅடி அன்ன தூங்குநடைக் குழவியோடு
>
> பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்க
>
> (பொருந 125-126)

என்ற அடிகளின் வழியாக கரிகாலனின் கொடைச் சிறப்பினையும் பண்பினையும் அறிய முடிகிறது.

## பழக்க வழக்கம்

காக்கைக்கு உணவு வைக்கும் பழக்கம் பண்டைய காலத்திலிருந்து இன்றுவரை கடைபிடித்து வரும் செயலாகும். பண்டைய மருத நிலத்து குடிமக்கள் உதிரத்தோடு அளைந்த சிவந்த சோற்றுப் பலியை நாள் தவறாமல் காக்கைவைக்கும் பழக்கத்தை கடைபிடித்துள்ளனர்

என்பதை

தாழ் தாழைத்தன் தண்டலைக்
கூடுகெழீஇய குடிவயினான்
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை

(பொருந 181-184)

இந்த அடிகள் பண்டைய மக்களின் பழக்கத்தை வெளிக்காட்டுகிறது.

## மரபு

பண்பாட்டினை வெளிப்படுத்தும் ஒரு பகுதியாக மரபும் உள்ளது. இதன் வழியாக பண்டைய தமிழர்களின் விருந்தோம்பல் வழிபாடு, பண்டமாற்று, வழி அனுப்புதல் இதனை நன்கு உணர இயலுகிறது.

**வழி அனுப்புதல்**

பண்டைய காலத்தில் மன்னனிடமும், மக்களிடமும் புதிதாக வந்தோரை உபசரிக்கும் முறை இருந்துள்ளது.

உயர்ந்தோர், நண்பர், பெரியோர் முதலியோரை வரவேற்கும் பொழுதும், வழிவிடும்போதும் ஏழடி எதிர்சென்று வரவேற்றலும், ஏழடி பின் வந்து வழிவிடலும் மரபாகும்.[15]

பொருநராற்றுப்படையில் பாடப்பட்டள்ள பாட்டுடைத் தலைவனிடம் கரிகாலனிடம் மேற்கூறிய பண்பு சிறப்பாக இருந்தது என்பதை

காலின் ஏழ்அடிப் பின் சென்று

(பொருந 166)

இந்த அடியின் வழியாக வெளிப்படுகிறது

**விருந்தோம்பல்**

விருந்தோம்பல் பண்பு என்பது பண்டைய தமிழர்களின் தலையாய பண்பாகும். பண்டைய தமிழர்கள் தன்வீடு தேடி வரும் அனைவரையும் உபசரிக்கும் பண்புடையவர்கள் ஆவார்.

விருந்தோம்பல் பண்பு எத்தகைய சிறப்புடையது என்பதை வள்ளுவர் கூறும்போது

மோப்பக்குழையும் அனிச்சம் முகந்திரிந்து

நோக்கக் குழையும் விருந்து

(குறள் 90 )

என்னும் குறள் வழியாக அனிச்சப்பூ மோந்து பார்த்தால் வாடும் அதுபோல விருந்தினரோ விருந்தளிப்பவரின் முகம் வேறுபட்டுத்தோன்றினாலே வாடுவர் எனக் கூறுகிறார்.[16]

தொல்பாக்பிய செய்யளியலில் விருந்து என்றால் புதுமை என்று பொருள்படும் எனக் தொல்காப்பியர்

விருந்தே தானும்

புதுவது புனைந்த யாப்பின் மேற்ற

(தொல் செய்யுளியல் 540நூ)

இலக்கணத்தில் கூறுகிறார்.[17]

கரிகாற்பெருவளத்தான் தன்னை நாடி வந்தவர்களுக்கு

விருந்தோம்பியதை

துராஅய் துற்றிய துருவைஅம் புழுக்கின்

பராஅரை வேவை பருகு எனத்தண்டி

காழின் சுட்ட கோழ்லான் கொழுங்குறை

ஊழின் ஊழின் வாய்வெய்து ஒற்றி

(பொருந 103-106)

என்னுடைய இவ்வடிகளில் இறைச்சி உணவு உண்டதையும், இவ்வுணவை வெறுத்தபோது சுவையுடைய தின்பண்டங்களையும் சுவையான தேறலுடன் கூடிய மதுவையும் அருந்தினோம் என்று பொருநர்கள் கூறுவதாக அமைந்துள்ளது.

**பண்டமாற்றுமுறை**

பண்டைய மக்கள் தங்கள் தேவைகளுக்கு ஏற்ப அந்தந்த நிலங்களைச் சார்ந்த உணவுப்பொருட்களை உற்பத்திச்செய்துள்ளனர். பரதவ மகளிர் தங்களிடம் உள்ள தேன், கிழங்கு, மீன், நெய், மான்தசை, அவல் போன்ற பொருட்களை விற்றுள்ளனர். இதனை

தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்

மீன் நெய்யோடு நறவு மறுகவும்

தீங்கரும்பொடு அவல் வகுத்தோர்

மான்குறையொடு மது மறுகவும்

குறிஞ்சி பரதவர் பாட நெய்தல்

நறும் பூங்கண்ணி குறவர் சூட

கானவர் மருதம் பாட அகவல்

(பொருந.214-220)

சங்க கால மகளிர் தேன், கிழங்கிற்கு மாற்றாய் மீன் நெய்யையும் நறவையும் பெற்றுக்கொண்டுள்ளனர். இனிமைப் பொருந்திய கரும்பிற்கும் அவலிற்கும் விலையாய் மானின் தசையையும், கள்ளையும் பெறுவர்.

இவ்வாறாக பொருட்களை பண்டமாற்றும் மரபு காலம்காலமாக இருந்து வந்துள்ளது.

**வழிபாடு**

ஒரு செயலை செய்வதற்கு முன்பு, தாம் நினைத்த காரியம் நிறைவேற்றுவதற்கும் இறைவனை வழிபடுகிறோம். போர்க்குச் செல்லும் முன் கொற்றவையை வழிபட்டுவிட்டு போரில் வெற்றிபெறவேண்டும் என்று சென்றுள்ளதை காட்டின் வழியே செல்லும் பொருநர் பாடினியும் காளியின் மனமகிழும்படி அவற்றிற்குச் செய்யும் முறைமைகளைச் செய்தனர் என்பதை

வலைவலந் தன்ன மென்றிழல் மருங்கில்
காடுவறை கடவுட்கடன் கழிப்பிய பின்றை

(பொருந 52-53)

இந்த அடிகளின் வழியாக இறைவனை வழிபடும் மரபு நிலையை அறிய இயலும். இதுபோல்மலைபடுகாடமிலும் இறைவழிபாடு மேற்கொண்டனர் என்பதை

மறந்தமை கல்லாய் பழனும் ஊழ் இறந்து

பெரும்பயம் கழியினும் மாந்தர் துன்னோர்

(மலை 263-64)

ஊழ்வினையால் இடையூறு நேராமல் இருக்க இறைவழிபாட்டினை மேற் கொண்டுள்ளனர்.[18]

**நெறிமுறைகள்**

சமூக மக்களுக்காக ஏற்படுத்திக்கொள்ளும் சில செயல்முறைகள் அவர்களின் வாழ்க்கையை நெறிபடுத்த உதவும்தனிமனிதரானாலும் சரி, குழுவினராக இருந்தாலும் சரி அவரவர் இப்படித்தான் செயல்பட வேண்டும். இப்படித்தான் நடந்துகொள்ள வேண்டும் என்ற எதிர்பார்ப்புகளை நெறிமுறைகள் குறிப்பிடுன்றன.[19]

இத்தகைய பண்பாட்டினை பண்டைய தமிழர்களின் வாழ்விலும் காண இயலும்.

**அரசன் ஆணைக்கு கட்டுபடுதல்**

அரசனின் வாயில் காவலராக இருப்பவன் அரசனின் ஆணைக்கு எப்பொழுதும் கட்டுப்பட்டு நடத்தல் முறையாகும். தன்னை நாடிவந்த

பொருநர்களையும் அவர்களின் சுற்றதினரையும் உடனே அழைத்து வருக என கட்டளையிட்டதை

கதுமெனக் கரைந்து வம் எனக் கூவய்

அதன் முறை கழிப்பிய பின்றை பதன் அறிந்து

என்ற அடியின் வழி வெளிப்படுகிறது.

(பொருந 101-102)

**ஆற்றுப்படுத்தலில் அறம்**

உலகில் அறப்பண்பு மிகுந்து தன்னிடம் உள்ள செல்வங்களை எல்லாம் வறியவருக்கு வாரி வழங்குகின்ற வள்ளல்களின் புகழினைப் பாடுவதற்காக வகுக்கப்பட்டது தான் ஆற்றுப்படை இலக்கியமாகும். அறப்பண்புகளின் அடிப்படையில் ஆற்றுப்படை இலக்கியங்கள் திகழ்கின்றன.

பொருநன் முதலிய கலைஞர்கள் அரசனிடமிருந்து பரிசுப்பெற்றுத்திரும்பும் போது எதிர்படுகின்ற கலைஞரின் வறுமை நிலையை எண்ணி மனம் இரங்குதலும், உதவுதலும் அவர்களின் பண்புநலன்களில் அறம் வெளிப்படுகின்ற என்பதை

ஆடுபசி உழந்தநின் இரும்பேர் ஒக்கலொடு

நீடுபசி ஒராஅல் வேண்டின்நீடு இன்று

எழுமதி வாழி

(பொருந61-63)

என்ற அடிகள் கொல்வது போன்ற பசியாலே உன் சுற்றத்தார்பெரிதும் உள்ளனர் உன் சுற்றத்தாரும் நெடும் பசியில் இருந்து நீங்க வேண்டுமாயின், காலம் நீட்டித்தல் இன்றி உடனே புறப்படுவாயக என்றார் இத்தகைய உயர்ந்த எண்ணமும் சிறந்த அறப்பண்பும் அக்கால கலைஞனிடம் இருந்ததை பொருநாற்றுப்படை வழி அறிய முடிகிறது.

# தொகுப்புரை

* பண்டைய மக்கள் நல்ல இயற்கை வளங்களுடன் இருந்துள்ளனர்.
* பொன்னாலான பொருட்களை பயன்படுத்தியிருக்கிறார்கள்.
* வேளாண்மை நன்கு விளைந்துள்ளது. அதனை சேகரித்துவைக்க நெற்கூடு பயன்படுத்தப்பட்டுள்ளது.
* நரம்புக்கருவியும்,தோற்றகருவியும் அதிகமாக பயன்படுத்தியுள்ளனர்.
* செல்வளம் மிகுந்து இருந்ததால் கரையழகு மிக்க பட்டாடைகளை அணியும்வழக்கம் இருந்துள்ளது.
* கரிகாழச்சோழமன்னன் கொடை கொடுப்பதில் சிறந்த பண்பானவன் ஆவான்.
* பாடினிகளுக்கு பொன்னரிமாலையை சூடிக்கொள்ள தருவான் என்பது தெரிகிறது.
* வானிலை அறிவு நிரம்பப்பெற்றவர்களாக இருந்துள்ளனர்.
* கரிகாற்பெருவளத்தான் பிறரது நிலையினை அறிந்துகொள்ளும் பண்புடையவராக இருந்தது தெரிகறிது.
* கரிகால மன்னன் தன்னை நாடி புதிதாக வந்தோரை ஏழடி முன்சென்று அழைத்துவரும் பழக்கம் காணப்படுகிறது.

## சான்றெண் விளக்கம்

1. இரா. மோகன் பத்துப்பாட்டு மூலமும் உரையும், ப.1

2. க.ப. அறவாணன், தமிழர் மேல்நிகழ்ந்த பண்பாட்டுப் படை யெடுப்புகள்,ப.15

3. வே.சா. அருள்ராசு , பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், ப.69

4. அ. ராகவன் இசையும், யாழும் ப.46

5. மேலது ப.189

6. வ.த. இராமசுப்பிரமணியம், சிலப்பதிகாரம், ப.116

7. ஒ.முத்தையா, செம்மொழி தமிழ் இலக்கியங்களில் தமிழரின் மரபு அறிவு பதிப்புகள் ப.150

8. மேலது ப.150

9. வ.த.இராமசுப்பிரமணியம், மூலமும் உரையும்,ப.132

10. இளம்பூரணனார் உரை தொல்காப்பியம் பொருளதிகாரம் ப.101

11. பக்தவச்சலபாரதி , பண்பாட்டுமானுடவியல் ப.158

12. மேலது ப.158

13. மேலது ப.159

14. மு. வரதராசனார்,திருக்குறள் தெளிவுரை, ப.47

15. க. சுகன்யாதேவி, பொருநராற்றுப்படை சமுதாயச் சித்திரிப்பு ப.101

16. மு,வரதராசனார், திருக்குறள் தெளிவுரை,ப.19

17. இளம்பூரணார் உரை, தொல்காப்பியம் பொருளதிகாரம் ப.512

18. பொ.வே. சோமசுந்தரனார், மலைபடுகடாம் ப.22

19. பக்தவச்சலபாரதி பண்பாட்டு மானுடவியல் ப.161

# இயல் மூன்று

## சிறுபாணாற்றுப்படையில் பண்பாட்டுக் கூறுகள்

ஆற்றுப்படை இலக்கியங்களில் மூன்றாவதாக அமைவது சிறுபாணாற்றுப் படை ஆகும். இந்நூலைப் பாடியவர் நல்லூர் நத்தத்தனார் ஆவார். இவர் ஓய்மாநாட்டு மன்னன் நல்லியங்கோடனிடம் பரிசு பெற்ற பாணன் வறுமையில் வாடும் பாணனை ஆற்றுப்படுத்துவதையும், அங்கு வாழ்ந்த மக்களிடம் நிலவிய பண்பாட்டுக்கூறுகளையும், மன்னின் பண்பு நலன்களையும் பற்றி அறிவது இவ்வயலின் நோக்கமாகும்.

பொருள்சார் கூறுகள், அறிதல்சார் கூறுகள், நெறியியல் கூறுகள் என மூன்று நிலையில் பண்பாட்ட நிலைகள் வெளிப்படுத்தப்படுகின்றன.

### பொருள்சார் கூறுகள்

பொருள் சார்ந்த கூறுகள் என்பது மக்கள் அவர்களின் பயன்பாட்டிற்காக ஏற்படுத்திக் கொள்ளும் அனைத்தும் ஆகும். வீட்டுப்பொருள், தொழில்கருவிகள், கட்டடங்கள் போக்குவரத்து சாதனங்கள் அனைத்தும் ஆகும்.

**பொன்கலம்**

பொன்னாலான கலங்களை அரண்மனையில் பயன்பாட்டில் இருந்துள்ளது. தன்னை நாடி வரும் பாணர்களுக்கு மகிழ்ச்சியுடன் சுவையான தேறலை பொற்கலத்தில் கொடுத்து உண்ணச்செய்வான் நல்லியங்கோடன், என்பதையும்

இளங்கதிர்ஞாயிறு எள்ளும் தோற்றத்து
விளங்குபொற்கலத்தில் விரும்புவன பேணி

(சிறு 243-244)

பொன்னாலான கலன் பயன்படுத்தியதையும் அறியமுடிகிறது.

இதுபோலவே பொருநராற்றுப்படையில் பொன்னாலான வட்டிலில் கள்ளை வார்தது மகளிர் தந்ததை

இழையணி வனப்பின் இன்நகை மகளிர்
போக்கு இல் பொலங்கலம் நிறையப்பல்கால்

(பொரு 85-86)

என்ற அடிகள் உணர்த்துகிறது[1]

**உலக்கை**

பண்டையத்தமிழர்கள் அரிசியை உலக்கையால் குற்றி அதனை பிறகு உணவிற்கு பயன்படுத்தியுள்ளனர். சிறுபாணாற்றுப்படையில் இரும்புபூண் உள்ள உலக்கை பயன்படுத்தியதை கூறும்போது,

இருங்காழ் உலக்கை இரும்புமுகம் தேய்த்த

(சிறு .193)

என்ற அடி விளக்குகிறது.

உலக்கை புழங்கு பொருளாக பயன்படுத்தியதை பொருநராற்றுபடையில்

புகவை வேய்ந்த கவிகுடில் முன்றில்

அவல்எறி உலக்கைப் பாடுவிறந்து அயல

(பெரும் 225-226)

புதிதாக உள்ள குடிலின் முற்றத்தில் கிடக்கும் உரலில் அவலினை உழவரின் பிள்ளைகள் குற்றுவார்கள் என்பதை கூறுகிறது.[2]

**இசைக்கருவிகள்**

இசை என்பது இனிய ஒலிகளின் சேர்க்கை ஆகும். இது உயிர்களின் மனதை மயக்கும் தன்மைவாய்ந்தது. இன்பநிலையிலும் துன்ப நிலையிலும் உள்ளத்து

உணர்ச்சியை வெளிப்படுத்தும் ஆற்றல் ஆற்றல் இசைக்கு உண்டு.

சங்ககால மக்கள் தாங்கள் வாழ்ந்த நில அமைப்புக்கு ஏற்றவாறு இசைக்கருவிகளையும் பண்களையும் அறிந்திருந்தனர்.

பண்டைத்தமிழர்கள் தோற்கருவிகள், துளைக்கருவிகள், நரம்புக்கருவிகள், கஞ்சக்கருவிகள் என நான்கு வகையான இசைக்கருவிகளை அறிந்திருந்தனர். துளைக்கருவிகளுள் ஒன்றான குழலினை இசைத்து விறலியருடன் சேர்ந்து பாணர்களுடன் மகிழ்ச்சியுடன் ஆடிக்கொண்டு மன்னையும் வாழ்த்திப் பாடுவார்கள்.

தாளைஅவிழ்தெரியல் தகையோற்பாடி

அற்றகுழல் பாணி தூங்கி யவரொடு

(சிறு 161-162)

என்பதின் வழியாக குழல் என்னும் இசைக்கருவி புழங்குபொருளாக இருந்தது தெரிகிறது.திருமுருகாற்றுப்படையில் குன்றுதோறும் ஆடல்புரியும் தன்மை கொண்ட முருகன் புல்லாங்குழலை வாசிப்பவன் என்பதை

குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்

(திருமுருகு 208)

இந்த அடிகளின் வாயிலாக வெளிப்படுகிறது.[3]

**பாலையாழ்**

ஆற்றுப்படை நூல்களில் யாழின் பயன்பாடு அதிகமாக கானப்படுகிறது. பொற்கம்பியினை ஒத்த முறுக்கு அடங்கின நரம்பினது இனிய ஓசையையுடைய சிறிய யாழை இடப்பக்கத்தே தழுவி, நட்ட பாடை என்னும் பண்ணை பாலை யாழில் சிறுபாணன் வாசித்தான்

பொன்வார்ந் தன்ன புரியஅடங்குநரம்பின்
இன் குரல் சீறியாழ் இடவையின் தழீஇ
நைவளம் பழுநிய நயம்தெரிபாலை

(சிறு 34-36)

என்பதனை இந்த அடிகளின் வாயிலாக அறிய இயலுகிறது.

**சீறியாழ்**

சிறிய யாழை இசைப்போர் சிறுபானர் என அழைக்கப்பட்டனர். யாழ் தண்டினை நெகிழவேண்டிய இடத்தில் நெகிழ்ந்தும், இறுகவேண்டிய

இடத்தில் இறுகியும், சுற்றினன் நரம்பு துவக்கும் வார்க்கட்டு மணிகளை நிரலாகவைத்தது போல இரண்டு விளிம்பையும் சேரவைத்து முடுக்கின ஆணிகள் பொருந்தச் செய்து வயிறுசேரந்து ஒழுங்குபட்ட பத்தர், குமிழம் படித்தின் நிறம் அமைந்த போர்வை, அமிழ்தத்தைத் தன்னிடத்தே பொதிந்துவைத்திருக்கும் முறுக்கடங்கின நரம்புகள் ஆகியவற்றைக் கொண்டது சீறியாழ் எனக்கூறுவதின் வழியாக சீறியாழின் பயன்பாடு

அமிழ்து பொதிந்து இலிற்றும் அடங்கு புரிநரம்பின்

(சிறு. 227)

என்ற அடியின் வழி நரம்பு இசைக்கருவியான யாழின் பண்பு வெளிப்படுகிறது.

**கிலுகிலுப்பை**

தமிழ்நிலைப் பெற்ற மதுரையில் வாழ்ந்த பண்டைய தமிழ்மக்கள் , உப்புவிற்க குடும்பத்துடன் செல்லுவார்கள் அவர்களுடன் பிள்ளைபோல வளர்த்த மந்தியையும் அழைத்துச்சென்றுள்ளனர். உப்புவாணிகர் பிள்ளைகள் கையில் கிளிஞ்சலின் வயிற்றில் முத்துக்களைப் பெய்து மூடிக்கிலுகிலுப்பையாகக் கொண்டு உமனர்

குழந்தையுடன் விளையாடும். உமனர்கள் பிற உயிரினங்களின் மீது அன்புசெலுத்தவேண்டும் என்ற பண்மை பெற்றிருந்தனர் என்பது தெரிகிறது.

நோன்பகட்டு உமணர் ஒழுகையொடுவந்த
மகாஅர் அன்ன மந்தி, மடவோர்
நகாஅர் அன்ன நளிநீர்முத்தம்
வாள்வாய் அருந்தின் வயிற்றகத்து அடக்கி
.........................................................
.........................................................
கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்

(சிறு 55-61)

என்ற அடிகளின் வாயிலாக கிலுகிலுப்பை பயன்படுத்தியது தெரிகிறது.

**ஆடை**

ஆடை என்பது உடை எனவும் வழங்கப்படுகிறது. ஒவ்வொரு சமூக மக்களும் தாங்கள் வாழும் சூழலிற்கு ஏற்ப உடுத்தியுள்ளனர். ஆடைகளும்

பண்டைய மக்களிடம் உள்ள பண்பினை வெளிப்படுத்துகிறது.

சமுதாயத்தில் ஒவ்வொரு சாராரும் தத்தம் பொருள் வளத்திற்கும் மரபிற்கும் ஏற்பவெவ்வேறு வகையான ஆடைகள் அணிந்தனர்.[4]

**அறுவை**

அறுவை என்பது ஆடை என்பதைக்குறிக்கும். மற்றொரு பொருள் அறுக்கப்படுவது என்பதும் பொருளாகும். பாணர்களுக்கு சிறப்பாக நெய்யப்பட்ட பூத்தொழில் அமைந்த ஆடையினை அணிந்துகொள்ள மன்னன் நல்லியங்கோடன் வழங்குவான் என்பதையும்,

............................மாசுஇல்

காம்பு சொலித்தன்ன அறுவை உடீஇ

(சிறு 235-236)

மன்னன் என்பவன் மக்களும் நலமுடன் வாழவேண்டும் என்னும் பண்பு ஆழமாக மனதிலே பதிந்தவர்களாக இருந்துள்ளனர்.

பொருநாற்றுப்படையில் ஆடைப்பற்றிகூறம்போது கரிகால் பெருவளத்தான் என்னும்மன்னன் தன்னை நாடிவந்த பாணர்களுக்கு நுண்ணிய வேலைபாடு உடைய துகிலை அணிந்துகொள்ளகொடுத்தான் என்பதை

நோக்குநுழை கல்லா நுண்மைய பூக்கணிந்து
அரவுரி யன்ன அறுவை நல்கி

(பொருந 82-83)

இந்த அடிகள் மன்னனின் பண்பாட்டினையும் வெளிக்கொணர்கிறது[5]

**அணிகலன்**

பண்டையத்தமிழ் மகளிர்கள் தங்களை அழகுப்படுத்திக்கொள்ள அணிகலன் களையும் அணிந்துள்ளனர். இயற்கையான மலர்களையும், மரத்தால் செய்யப்பட்ட அணிகலனும் மேலும் பொன்னாலான அணிகலனும் அணிந்துள்ளார்கள்.அணிகலன் என்பதும் அவர்களிடம் புழங்கு பொருளாக இருந்தது தெரிகிறது.

**மணிமாலை**

பண்டைய மக்களிடம் முத்துக்களைகோர்த்து அணியும் முறை இருந்துள்ளது. அதுபோல நுணாமரத்தில் மணிகள் போல் செதுக்கப்பட்டு அவற்றைக் கோர்த்து தாங்கள் வளர்க்கும் மந்திகளுக்கு அணிந்திருந்தனர். இதன் வழியாக பண்டையத்தமிழர்கள் உயிரினங்களின்மீது அன்பினையும், பண்பினையும் கொண்டிருந்தனர் என்பதை

அறைவாய்க் குறுந்துணி அயில்உளி பொருத
கைபுனை செப்பம் கடைந்த மார்பின்
செய்பூங் கண்ணிசெவிமுதல் திருத்தி

(சிறு 52-54)

இந்த அடிகளின் வழி மரத்தாலும் அணிகலன் செய்து அணியும் பண்பு தெரிகிறது.

**தொடி**

தொடி என்பது கையில் அணியும் அணிகலன் ஆகும். கடையெழு வள்ளல்களுள் ஒருவரான காரி என்னும் குறுநில மன்னன் இரவலர்க்கு கொடுக்கும் கரங்களை உடையவன். அவன் கையில் தொடி என்னும் அணிகலனை அணிந்துள்ளான் என்பதை

கழல்தொடித் தடக்கை காரியும் நிழல்திகழ்

(சிறு -95)

இந்த அடி வழியாக வெளிப்படுகிறது.

**போக்குவரத்து சாதனம்**

பண்டைய தமிழர்கள் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குச் செல்லவும், பொருட்களை விற்பனை செய்ய எடுத்துச்செல்லவும் வண்டியினைப் பயன்படுத்தி யிருக்கிறார்கள்.உமணர்களும், உமணப்பெண்டிர்களும், பிள்ளைகளுடன் உப்புவிற்க வண்டியில் சென்றுள்ளனர்.

நோன்பகட்டு உமணர் ஒழுகையொடுவந்த

மகாஅர் அன்ன மந்தி மடவோர்

(சிறுபாண் 55-56)

என்பதை இந்த அடிகள் வழியாக போக்குவரத்து சாதனமாக வண்டியைப் பயன்படுத்தியுள்ளது தெரிகிறது. நற்றிணை (254-6), (அகம் 60:4), பட்டினப்பாலை (28-30) பாடல் அடிகளில் உப்புக்கு நெல் பண்டமாற்று செய்துள்ளனர் பண்டையத் தமிழர்கள் என்பது தெரிகிறது.

**அறிதல்கூறுகள்**

அறிதல் கூறுகள் என்பது ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்விலும், உலகத்தில் அவர்கள் அறிந்தவற்றின் வழியாகவும் வெளிப்படும் கூறுகளாகும்.

பருவகாலங்கள், இயற்கை நிகழ்ச்சிகள், வானவெளி போன்றவற்றை எவ்வாறு மதிப்பிடுகின்றனர் போன்ற அறிதிறகையோடு தொடர்புபடைய கூறுகளே அறிதல்சார் கூறுகளாகும்.[6]

காலநிலைகள் மாறுதலையும், அதற்கேற்ப இயற்கை நிகழ்வுகள் நடைபெறுவதையும் மேலும் குளிர்காலம், வேனில்காலம் போன்றவற்றை நன்கு அறிந்திருந்தை சிறுபாணாற்றுப்படை விளக்குகிறது.

**வேனிற்காலம்**

வேனிற்காலம் என்பது வெயில் காலத்தைக்குறிக்கும். பாலை நிலம் என்பது மிகவும் வெப்பமானது. இதன் வழியாகச் செல்லும் பாணருடன் வருகின்ற மகளிர் வெப்பம் ஏற்ற கூரிய பரற்கற்கள் கால்களைக்கிழித்து வருந்துகிறது இதனை தொடர்ந்து முதுவேனில் பருவமும் வரப்போகிறது என்பதை கூறும்போது,

கதுப்பு விரித்தன்ன காழ்அக நுணங்குஅறல்
அயில்உருப் பனைய ஆகி ஐதுநடந்து
வெயில்உருப் புற்ற வெம்பரல் கிழிப்ப
வேனில் நின்ற வெம்பத வழிநாள்

(சிறு 6-9)

இந்த அடிகள் வழியாக விளக்கப்படுகிறது. பண்டைய தமிழர்கள் தங்கள் வாழ்க்கையின் வழியாக இளவேனில், முதுவேனில் பருவங்களை நன்கு அறிந்திருந்தனர்.

தொல்காப்பியர் பாலைத்திணையின் தன்மையை கூறும்போது,

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே

(தொல் அகத்தினையியல் 955)

நடுவுநிலைத்திணையாகிய பாலைத்திணைக்கு வேனில் காலமான இளவேனிலும், முதுவேனிலும் உரித்தாகும் என்கிறார்.[7]

**குளிர்காலம்**

குளிர்காலம் என்பது கூதிர்காலமாகும். நல்லியங்கோடன் மன்னன் பாணர்களுக்கு வழங்கும் பரிசுகளைப்பற்றி கூறும்போது, குளிர்காலத்தில் வெண்திங்கள் வானில் பால்போல் ஒளிப்பரப்பும் என்கின்றனர் என்பதை

பருவ வானத்துப் பாற்கதிர் பரப்பி

(சிறு 250)

இந்த அடி உணர்த்துகிறது.

கூதிர்காலம் என்பது குறிஞ்சி நிலத்திற்கு உரியதாகும். ஐப்பசி, கார்த்திகை இந்த இரண்டுமாதங்களும், மார்கழி, தை போன்றவையும் குளிர்காலமாகும் என்பதை தொல்காப்பியர் வரையறுத்துகூறியுள்ளார்.

குறிஞ்சி கூதிர் யாமம் என்பனார் புலவர்

(தொல் அகத் 7நூ)

பனிஎதிர் பருவமும் உரித்தென மொழிப

(தொல் அகத் 8நூ)

என்பது புலப்படுகிறது.[8]

**பருவகாலமாற்றம்**

பண்டைய மக்கள் இயற்கையுடன் இணைந்து வாழ்ந்ததால் அதனைப்ப பற்றி நன்கு அறிந்திருந்தனர். ஒவ்வொரு பருவகாலமும் நிகழும், நிகழ்வுகள் நடை பெற்றால்தான் இயற்கை ஒருசமநிலையுடன் இருக்கும். அதுபோல் இல்லாமல் மாறுவது பருவகால மாற்றம் ஆகும். கடையேழு வள்ளல்களுள் ஒருவன் பேகன் ஆவான். பெரிய மலைப்பகுதிக்கு தலைவன் ஆவான் . இந்த குறுநில மன்னன் குளிரால் வாடிய மயிலுக்கு இரக்கமுடன் போர்வை வழங்கினான்.

வானம் வாய்த்த வளமலைக் கவா அன்

கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய

(சிறு 84-85)

இந்த அடிகள் புலப்படுத்துகிறது.

**நெறியியல் கூறுகள்**

நெறி என்பது ஒழுக்கம் ஆகும். நெறிப்படுத்துவது என்பது வழிப்படுத்துவது என்ற பொருளில்வரும். ஒரு சமூகத்தில் எப்படி வாழ வேண்டும் எவற்றை செய்யவேண்டும்.செய்யக்கூடாது போன்ற விதிமுறைகளுடன் தொடர்புடைய கூறுகளே நெறியியல் கூறுகளாகும்.விழுமியங்கள், நெறிமுறைகள், குடிவழக்குகள்,வழக்கடிபாடுகள், சட்டம், அளிப்புகள், போன்றவை நெறயியல் கூறுகளில் அடங்கும்.

**விழுமியங்கள்**

விழுமியங்கள் என்பது மதிப்புகள் என்று பொருள்படும். விழுமியங்களும் ஒரு சமூகத்தை சேர்ந்தோரின் பண்பாட்டை வெளிப்படுத்துகின்றன.எந்தச் சமூகம் உயர்ந்த விழுமியங்களைப் பின்பற்றுகிறதோ அதற்குத்தக அது உயர்ந்திருக்கும்.[9] சிறுபாணாற்றுப்படையில் கொடை, விருந்தோம்பல், வீரம் உயர்ந்த விழுமியங் களாகக் கருதப்பட்டுள்ளன.

**வீரம்**

வீரம் என்பது பண்டையத்தமிழர்கள் உயர்வாக கருதிய பண்பாடாகும். வீரம் என்பதற்கு உடல்வலிமை, வீரம் இல்லாதவன் கோழை, வீரர், வீரன் என்ற பொருளினை தமிழ் அகராதி கூறுகிறது. [10]

மருத நிலங்களால் சூழ்ந்துள்ள நிலத்தை ஒம்பும் சோழ மன்னனின் மாண்புகள் அளவில் அடங்காது. அப்படிப்பட்ட தொல்குடியில் தோன்றிய சோழ மன்னன் பகைவர்களைச் சுழித்து வெற்றி கண்டான் என்பதை

துங்கு எயில் எறிந்த தொடிவிளங்குதடக்கை
நாடா நல்இசை நல்தேர்ச் செம்பியன்
ஓடாப்பூட்கை உறந்தையும் வறிதே அதான்று

(சிறுபாண் 81-83)

என்று சோழ மன்னர் தொல்குடியில் தோன்றியவன் என்பதும் வன் பகைவனின் எயிலை அழித்தவன் என்பது புலப்படுகிறது. சிலப்பதிகாரம் (5:29), புறநானூறு 39) பாடல் அடிகளில் சோழ மன்னனின் வெற்றி சிறப்பு கூறப் பட்டுள்ளது.

**கொடை**

கொடை என்பது ஒருவருக்கு மனமுவந்து அன்புடனும் பண்புடனும் மனம் நிறையும்படி பரிசுகொடுத்து மகிழ்விப்பது ஆகும். கடையேழு வள்ளல்கள் கொடை வழங்குவதில் சிறந்திருந்தாலும் அவர்களை விடச் சிறப்பாக கொடை வழங்கும் பண்பு கொண்டவன் நல்லியங்கோடன் ஆவான்.

**நல்லியங்கோடனின் பண்புகள்**

ஒரு நாட்டிற்குரிய மன்னன் எப்படி இரக்கவேண்டும் என திருக்குறளில் கூறும்போது

படைகுடி கூழ்அமைச்சு நட்பரன் ஆறும்
உடையான் அரசருள் ஏறு

(குறள் 38)

மன்னன் என்பவன் படை,குடி, உணவு, அமைச்சர், நட்பு, கோட்டை என்னும் உறுப்பு ஆறனையும் உடையவன், அரசருள்சிங்கம் போன்று இருந்தல் என இறைமாட்சி என்னும் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளது.[11]இத்தகைய தன்மைகள் நல்லியங்கோடனிடம் இருந்தன.

பைந்நனை அவரைபவழங்கோப்பவும்

......................................................

விறல்வேல் வென்றி வேலூர்

*(சிறு 164-174)*

விண்மீனுக்கு இடையே தனிசிறப்புடன் விளங்கும் பால்நிலா போல நலியக்கோடன் சான்றோர் பரிசிலர் இடையே வீற்றிருந்தான் என்று அவன் கொடைப்பண்பை தெரிகிறது.

**பாடும் முன் பரிசு வழுங்கல்**

தன்னை நாடி வந்த பாணர்களுக்கு முதலில் மன்னன் வழங்கியுள்ளான். அவர்கள் தாங்கள் வறுமை நிலையை முதலில் மாற்ற வேண்டும்என்பதற்காக மூங்கிலின் உட்பட்டையை உரித்தாற்போலும் தூய ஆடையை உடுக்கச்செய்வான் என்பதை

............................................மாசுஇல்

காம்பு சொலித்தன்ன அறுவை உடீஇ

*(சிறு 235)*

இந்த நல்லியக்கோடனின் கொடை பண்பினை வெளிப்படுத்துகிறது.

**உணவு**

*சிறுபாணர்களும் அவர்களது உறவினர்களும் எத்தகைய சூழ்நிலையுடன் உள்ளார்கள் என்பதை அறிந்த மன்னன் மடைநூலில் கூறிய நெறியல்தவறாது சமைத்த அடிசிலை பொன்னாலான உண்கலத்திலேவைத்து அளிக்கும் வள்ளல் தன்மையை*

*பனுவலின் வழாஅப் பல்வேறு அடிசில்*

.................................................

.................................................

*விளங்குபொற் கலத்தில் விரும்புவனபேணி*

*(சிறு 241-244)*

*என்னும் அடிகளின் வழி அறியலாம்.*

**குதிரை அளித்தல்**

*நல்லியக்கோடன் கலைஞர்களுக்கு யானை, குதிரை, திறைப் பொருள் களைப் பரிசளித்துள்ளான் என்பது தெரிகிறது.*

மா செலவு ஒழிக்கும் மதனுடைய நோன்றான்

வான்முகப் பாண்டில் வலவனொடு தரீஇ

(சிறுபாண் 259-260)

என்ற வரிகள் மூலம் அறியலாம், மேலும், யாரும் வழங்காத பரிசான எருதையும், தேருடன் அல்லாமல் குதிரைகளைத் தனியாகவும் வழங்கியுள்ளார்.

**ஈகைபண்பு**

ஈகை என்பதும் கொடுத்தல் என்ற பொருளில்தான் வரும். ஈகை என்பது தம்மிடம் உள்ளதைப்பிறருக்குத் கொடுத்தலே ஆகும். அவ்வாறு செய்யப்படுகின்ற ஈகை நிறைவான மனத்துடன் செய்தல் வேண்டும். 'வலக்கை கொடுப்பதை இடக்கை அறிதல்கூடாது' என்ற வாய்மொழிக்கேற்ப பொதுவாக ஏழைகளுக்கும் திக்கற்றவர் களுக்கும் கொடுப்பது தான் ஈகையாகும்.[12]

கடையேழு வள்ளல்களும் அவர்களின் ஈகைப்பண்பும் சமூகத்தில் சிறந்த விழுமியங்களாக (மதிப்புகள்)கருதப்பட்டுள்ளது.இத்தகைய வள்ளல்கள் மக்களின் மீது மட்டுமல்லாமல் இயற்கைச் செல்வங்களின்மீதும்அன்புடையவராக திகழ்ந் ததால் தான் கொடையினைவழங்கமுடிந்தது.

**பேகன்**

பண்டைத் தமிழ்க் குடிகளுள் ஒன்று ஆவியர்குடி ஆகும். அக்குடியில் பிறந்தமையால் ஆவியர் பெருமகன் என்று அழைக்கப்படுகின்றான். பெரிய மலைநாட்டையுடையவன் பேகன். அப்பேகன் மலைவளம் காணச்சென்றபோது பருவமழையின் சாரலால் குளிரால் நடுங்கிய மயிலுக்கு தன்னுடைய போர்வையை வழங்கினனான் என்பதை

வானம் வாய்த்த வளமலைக்கா அன்
கான மஞ்சைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்

(சிறு 84-86)

இந்தஅடிகளின் வழி பேகனின் கொடை மடம் புலப்படுகிறது.

**பாரி**

பறம்பு மலைக்குத் தலைவனாக திகழ்ந்தவன் பாரி. வன் மலைவளம் காண வந்தான். அப்போது பற்றிப்படரக் கொழுக்கொம்பு இல்லாமல் முல்லைக்கொடி தன்னிடம் கொழுக்கொம்பு வேண்டுவதாகக் கருதித் தன் தேரையே, அதற்குக்

கொழுக்கொம்பாக நிறுத்திவிட்டு நடந்தே அரண்மனை திரும்பினான் பாரி. இவ்வாறு பாரியின் கொடை பண்பினை

நறுவீ உறைக்கும் நாக நெடுவழிச்
சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய
பிறங்கு வெள்ளருவி வீழுஞ் சாரல்
பறம்பிற் கோமான் பாரியும்

(சிறு 87-91)

இந்த அடிகள் பாரியின் ஈகைப் பண்பினை வெளிப்படுத்துகிறது.

பாரியின் நாட்டில் உள்ள சுரபுன்னைகளும், கரும்புகள் தேன் உண்ண நல்கும் சிறப்புடையன. மலையில் இருந்து வீழும் அருவி கூட மக்களுக்கு நன்மையை பயக்குகிறது என்ற புறநானூறு ஒரு பாடலில் கபிலர் கூறியுள்ளார்.

பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப்புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும் உண்டு ஈண்டு உலகுபுரப்பதுவே

(புறம் 107)

பாரியின் வள்ளல்தன்மை குறிப்பாக வெளிப்படுகிறது.[13]

**காரி**

திருமுடிக்காரி என்னும் மலையமான் என்றும் அழைக்கப்படும் மன்னன் சான்றோர்கள் வியக்கும்படி கொடைவழங்கியவன் ஆவான். ஒலிக்கின்ற மணி யினையும் வெண்மையான பிடரி மயிரையும் உடையதன் குதிரையுடன் தன் நாட்டையும் அனைவரும் வியக்கும் வண்ணம் அன்பு கலந்த இனிய சொற்களால் இரவலருக்குக்கொடையாக வழங்கினான் காரி என்பதை

வால் உளைப் புரவியொடு வையகம் மருள
ஈரநல் மொழி இரவலர்க்கு ஈந்த
அழல் திகழ்ந்து இமைக்கும்அஞ்சுவரு-நெடுவேல்
கழல் தொடித் தடக்கைக் காரியும்

(சிறுபாண் 92-95)

இந்த அடிகள் வா உணரமுடிகிறது.

**ஆய்**

ஆய் அண்டிரன் ஆய்குடி என்னும் ஊரைத் தலை நகராகக்கொண்டு ஆட்சிசெய்தவன். இவர் நாகம் தந்த நீலமணி பதிக்கப்பெற்றவிலை உயர்ந்த ஆடையைக் கல்லால் மர நிழலில்அமர்ந்துள்ள சிவபெருமானுக்கு வழங்கி ஆய் கொடை மடம் பட்டான் என்பதை

நீல நாகம் நல்கிய கலிங்கம்
ஆல்அமர் செல்வதற்கு அமர்ந்தனன் கொடுத்த
சாவம் தாங்கிய சாந்து புலர்திணி தோள்
ஆர்வ நன்மொழி ஆயும்

(சிறுபாண் 96-99)

என்பதை இந்த அடிகள் விளக்குகின்றன.

**அதிகன்** .

அதியர்குடியில் பிறந்தவன் என்றும், அதிகள், அதியன், அதிகமான், அதியமான், நெடுமான் அஞ்சி என்னும் பல பெயர்களால் இந்த மன்னன் குறிப்பிடப்பட்டான் என்ற கூறுவார்.பெரிய மலையில் கருநெல்லி மரத்தில்

கனிந்திருந்த ஒரே ஒரு இனிய நெல்லிக்கனியைத் தன் உயிரையும் பொருட்படுத்தாது பறித்து வந்தான். அமிழ்தின் தன்மையைக் கொண்ட அவ்வினிய கனியைத்தான் உண்டு நீண்ட நாள் வாழ விரும்பாமல் ஔவைக்குக் கொடுத்து உண்ணச் செய்தான் தன் வாழ்நாளையே ஔவைக்குக் கொடுத்த வள்ளல் என்பதையும்

கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி
அமிழ்து விளைதீம் கனிஔவைக்கு ஈந்த
உரவுச்சினம் கனலும் ஒளிதிகழ்நெடுவேல்
அரவக்கடல்தானை அதிகனும்

(சிறு 100-103)

அதிகன் தமிழ்மொழியின் மீது கொண்ட பற்றும் வெளிப்படுகிறது.இதேபோன்ற புறநானூற்று பாடல் ஒன்று அதிகனின் கொடைபபண்பினை வெளிப்படுத்துகிறது. அதிகமான் ஔவைக்கு ஈந்த இக்கொடை உயிர்கொடைபோன்றது என்பதனை

ஆதல் நின்னகத் தடக்கிச்

சாதல் நீங்க எமக்கீந் தனையே

(புறம் 91)

என்னும் பகுதியில் அறியலாம்.[14]

**நள்ளி**

குளிர்ச்சி பொருந்திய மலைநாட்டின் தலைவன் நள்ளி ஆவான். நள்ளி தன்னிடத்தில் நினைப்பதை மறக்காமல் வெளிப்படையாகப் பேசி வறியவர்களிடம் நட்பு பாராட்டும் இயல்பினன் அவ்வறியவர்கள் உள்ளம் மகிழுமாறு அவர்கள் இல்லறம் நடத்துவதற்குத் தேவையான பொருளைத்தட்டுப் பாடின்றித் தாராள மாக வாங்குபவன் என்பதை

நட்டோர் உவப்ப நடைப் பரிகாரம்

முட்டாது கொடுத்த முனை விளங்குதடக்கை

துளிமழை பொழியும் வளிதுஞ்சுநெடுங்கோட்டு

நளிமலை நாடன் நள்ளியும்

(சிறுபான் 104-107)

என்னும் அடிகள் நள்ளி மன்னனின் ஈகைப் பண்பினை வெளிப்படுத்துகிறது.

**ஓரி**

கொல்லி மலைக்குத் தலைவனாக விளங்கியவன் ஓரி. இவன் வளமிக்ககாடுகளையும் மிகுதியாக உள்ள கன்றகளையும் நாட்டையும் பரிசாகதந்தவன் என்பதை

நறும்போது கஞலிய நாகுமுதிர் நாகத்துக்
குறும்பொறை நன்னாடு கோடியர்க் கீந்த

(சிறு 107-108)

இந்த அடிகள் புலப்படுத்துகின்றன.

**கற்புநிலை**

கற்பு என்பது உயர்ந்த ஒழுக்கமாகக் மக்களிடம் கருதப்பட்டுள்ளது. காலம் காலமாகப் பெண்கள் வாழ்வில் வலியுறுத்தப்பட்டு வருகின்றது. சமூகத்தில் சிறந்த விழுமியமாக இருந்ததை சிறுபாணாற்றுப்படையும் கூறுகிறது.

முல்லை சார்நத கற்பின் மெல்லியள்

(சிறு 30)

முல்லைபோல் கற்புநிலை உடையவராக பெண்கள் இருந்துள்ளனர்.

**மரபு**

சமூகத்தில் மக்களிடம் காலம் காலமாக பின்பற்றப்பட்டும், அவர்களிடம் நீங்காமல் நிலைத்திருக்கும் பண்புகளுள் ஒன்று மரபாகும்.புதிதாக வருபவர்கள் விருந்தினர் என அழைக்கப்பட்டனர். எயிற்பட்டிணம், வேலூர், ஆமூர் ஊர்களுக்க வந்த சிறுபாணர்களையம் அவர்களின் சுற்றத்தினர்ககும் உணவு வாங்கிய பண்பு சிறந்த பண்பாகும்.கூலவாணிகன் சீத்தலைசாாதனாரால் இயற்றப்பட்ட மணிமேகலையில் விருந் தோம்பலைக் கூறும்போது,

மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்

உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்

(மணி 11:95-96)

பசியால் வாடும் மக்களுக்கு யார் ஒருவர் உணவு கொடுக்கின்றாரோ அவர்

அவர்களுக்கு உயிரையே கொடுத்தவராவார் எனக் கூறியிருப்பது விருந்தோம்பலின் உச்சநிலை பண்பினை புலப்படுத்துகிறது எனலாம்.[15]

**நெய்தல் மக்களின் விருந்து**

நெய்தல் நில மக்கள் தமக்காக வாழாமல் பிறருக்காக வாழக்கூடியவர்கள் ஆவார். தம்மை நாடி வருவோர்க்கு மணமுவந்து உணவளிக்கும் பாங்கினை

*பணிநீர்ப் படுவின் பட்டினம் படரின்*

*............................................*

*............................................*

*நுதிவேல் நோக்கின், நுளைமகள் அரித்த*

*பழம்படு தேறல் பரதவர் மடுப்ப*

*.....................................................*

*......................................................*

*அறற்குழல் பாணி தூங்கி யவரொடு*

*வறற்குழற் சூட்டின் வயின்வயின் பெறுகுவீர்*

*(சிறுபாண் 154-163)*

பரதவ பெண்கள் காய்ச்சி அரித்த தேறலை, பாணர்களின் வழி நடந்த சோர்வு நீங்க முதலில் வழங்கினார்கள் பின்பு புல்லரிசி சோற்றையும், கருவாட்டையும், தேக்கிலையில்வைத்து வழங்கி விருந்தினரை வரவேற்றமை விவரிக்கப்பட்டுள்ளது.

**முல்லைநிலமக்கள் விருந்து**

முல்லைநிலமாகிய வேலூரை அடைந்தால் அம்மக்கள் விருந்தினரை வரவேற்று இனிய புளிங்கறி இட்ட சோற்றுடன் ஆமானினது சூட்டிறைச் சியயையும் வழங்கி அவ்வழியாகச் செல்பவர், பசியை போக்கி உபசரித்ததை

எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு
தேமா மேனிச் சில்வளை யாயமொடு
ஆமான் ஆட்டின் அமைவரப் பெறுகுவீர்

(சி.பா.175-177)

இந்த அடிகள் வேலூர் மக்களிடம் இருந்த மரபினை வெளிப்படுத்துகிறது.

**மருதநில மக்கள் விருந்து**

மருதநிலத்தில் ஆமூரில் வாழும் உழத்தியர் தாமே விருந்தினரை எதிர்கொண்டு சென்று உபசரித்தது விளக்கப்பட்டுள்ளது.

உரண்கெழு நோனபகட்டு உழவர்தங்கை
பிடிக்கை அன்ன பின்னுவீழ் சிறுபுறத்துத்
தொடிக்கை மகடுஉ மகமுறை தடுப்ப
இருங்கால் உலக்கை இரும்புமுகம் தேய்த்த
அவைப்பு மாண்அரிசி அமலைவெண்சோறு

சுவைத்தான் அவலன் கலவையொடு பெருகுவீர்

(சி.பா.190-195)

என்று அமலை வெண்சோற்றினை நண்டினது கலவையோடு முன்பின் அறியாத புதியோர்க்கு நல்ல உள்ளத்தோடு உண்ணக் கொடுத்தமையைக் காணலாம். வீட்டில் வளர்த்த பெடைக்கோழியைப் பொரித்தும் கொடுத்துள்ளனர்.

**குடிவழக்குள்**

ஒரு சமுதாயத்தில் அனைவரிடமும் காணக்கூடிய பொதுவான நடத்தை முறைகளே குடிவழக்கு எனப்படும், குடிவழக்கானது அனைவரிடமும் பரவிக்காணக்கூடியதாக இருக்கும்.

**பெரியோரை வணங்குதல்**

தம்மைவிட பெரியோரைக் காணும்போது அவருக்கு கைகுவித்து மரியாதைசெய்து மதிப்பளிக்கும் பண்பு

நூல்நெறி மரபின் பண்ணி ஆனாது

முதுவோர்க்கு முகிழத்த கையினை

(சிறு 230-231)

என்பதில் கைகுவித்து வணங்குவது தமிழரின் பண்பாகும் என்பது இந்த அடி உணர்த்துகிறது.

**பாணர்களை பாதுகாத்தல்**

சிறுபாணர்களின் வழியாக இசைக்கலை வளர்ந்துள்ளது. ஏனென்றால் இவர்கள் ஊர் ஊராகச் சென்று நல்லியங்கோடன் மன்னனின் நாட்டு, நகர், மலைவளம் என புகழந்து இசையுடன்பாடியுள்ளனர். குடிமக்களை பாதுகாப்பது மன்னனின் கடமை யாகும். அதுபோல நல்லியங்கோடன் சிறுபாணர் களையும் அவர்களின் சுற்றத்தினரையும் பாதுகாத்ததை

எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம்
வரிகடல் வேலி வியலகம் விளங்க
ஒருதான் தாங்கிய ஊரனுடைய நோன்தான்

(சிறு பா 113-115)

என்னுடைய வரிகள் மன்னனின் பண்பினை புலப்படுத்துகின்றன.

# தொகுப்புரை

* சிறுபாணாற்றுப்டபடையில் குறிப்பிடப்படும் மன்னனிடமும், மக்களிடமும் விருந்தோம்பல் பண்பாடு சிறப்பாக காணப்படுகிறது.

* இல்லறத்திற்கும், தொழிலுக்கும் ஏற்ப பொருட்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

* உமணர்கள் தாங்கள் வளர்த்த மந்திகளின் மீது அன்பு செலுத்தினர் அதனை பிள்ளைகள் போல கருதியுள்ளனர்.

* போக்குவரத்திற்கு வண்டியினை பயன்படுத்தியிருக்கிறார்கள் என்பது தெரிகிறது.

* பருவகாலத்தையும் அது மாறும் சூழலினையும் நன்கு அறிந்திருந்தனர் பண்டையத் தமிழர்கள்.

* வீரம், கொடை, பாடும் முன்பு பரிசு வழங்கல், ஈகை பண்பு சிறந்த விழுமியங்களாக கருதப்படுகிறது.

* கடையேழு வள்ளல்களும் ஈகை பண்புகொண்டவர்களாகவும், இயற்கையினை மீது மதிப்பும்அன்பும் உடையவராக திகழ்ந்துள்ளனர்.

* பெரியோர்களை மதித்தும் போற்றியும் வாழ்ந்துள்ளனர் பண்டையத்தமிழ் மக்கள் என்பது தெரிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. முனைவர் இரா. மோகன். பத்துப்பாட்டு முதற் தொகுதி ப.83

2. மேலது ப.213

3. மேலது ப.140

4. ஆ. இராமகிருட்டிணன், தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும் ப.92

5. திரு. பொ. வே. சோமசுந்தரனார், பத்துப்பாட்டு வரிசை இரண்டு

பொருநராற்றுப்பட ப.18

6. பக்தவத்சலபாரதி, பண்பாட்டு மானுடவியல், ப.158

7. தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும் ப.293

8. இளம்பூரணனார் உரை, தொல் தொல்காப்பியம், பொருளதிகாரம், ப.10-11

9, முனைவர் தாயம்மாள் அறவாணன், தமிழ்ச் சமூகவியல்,ப

10. அ.கி. மூர்த்தி, லியோரவின் தமிழ் அகராதி, ப,598

11. அ.மாணிக்கம், திருக்குறள் தெளிவுரை ப.79

12. பேரா கி. நாச்சிமுத்து, சங்க இலக்கிய ஆற்றுப்படை நூல்களில் கொடை நீதி

ப.2288

13. து.துரைச்சாமிபிள்ளை புறநானூறு முதற்தொகுதி , ப.241

14. மேலது ப.214

15, புலியூர்சேகிசயன், மணிமேகலை.ப.132

## இயல் நான்கு



# பெரும்பாணாற்றுப் படையில் பண்பாட்டுக் கூறுகள்

## இயல் நான்கு

## பெரும்பாணாற்றுப்படையில் பண்பாட்டுக் கூறுகள்

ஆற்றுப்படை இலக்கியங்களுள் நான்காவதாக உள்ளது. பெரும் பாணாற்றுப்படையாகும். இதன் வழியாக பண்டைய கால மக்களின் பண்பாட்டுக்கூறுகளை உய்த்து உணர்ந்து வெளிப்படுத்துவதே இவ்வியலின் நோக்கமாகும்.

பெரும்பாணாற்றுப்படையில் தொண்டைமான் இளந்திரையன் மன்னனின் நாட்டின் சிறப்பும்,பண்பும் பல்வேறு பண்பாட்டு கூறுகளையும் காண இயலும். பேரியாழை வைத்து பாடும் பாணரின் வழியாக பண்பாட்டு கூறுகள் வெளிப்படுவதை காணஇயலும்.

**பொருள்சார் கூறுகள்**

பண்பாடு என்பது பொருள்களை சார்ந்தும் காணப்படும். இல்லங்களுக்கும்,தொழிலுக்கும் தேவையான பொருட்களை உருவாக்கி பயன்படுத்தியுள்ளனர். புழங்கு பொருட்களை அடிப்படையாகக் கொண்டு தொன்மைக் காலம் மற்றும் பண்டைக்கால மக்களின் பண்பாட்டை அறிந்து கொள்ளுதல் இயலும்.

**சாடி**

சாடி ஒரு வகை மண்பாண்டமாகும். பண்டைக்கால மக்கள் கள்ளை நிரப்பி வைத்துக்கொள்ளப் பயன்படும் பாண்டமாகச் சாடியைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை

வல்வாய்ச் சாடியின் வழைச் சுற விளைந்த

(பெரும் 280)

அதாவது வலிய வாயினையுடைய சாடியில் கள் வைக்கப்பெறும்.

அகநானூற்றில் பண்டைய கால புழங்கு பொருளாக சாடி பயன்படுத்தப்பட்டுள்ளதை.

நன்மரம் குழீஇய நனைமுதிர் சாடிப்

பன்னாள் அரித்த கோடி யுடைப்பின்

(அகம் 166:1-21)

என்ற அடிகள் புலப்படுத்துகிறது.[1]

**அகல்**

அகல் என்பதற்கு விரிவு என்று பொருளாகும். எனவே, அகன்ற வாயினையும்,கீழ்ப்பகுதி தரையில் வைக்கும் படியான அமைப்பினையும் கொண்ட கலன் அசல் எனப்பெயர் பெற்றுள்ளது.

அப்பம் விற்கும் விணகர் கரிய அகலின் பாகொடு கூட்டிச் செய்த நூல் போல் கிடக்கும் இடியப்பத்தைப் பாலிட்டு வைப்பர் இதனை,

கார் அகல் கூவியர் பாகொடு பிடித்த
இழைசூழ் வட்டம் பால கலந் தவைபோல்

(பெரும் 377- 378)

என்பதைனை இந்த அடிகளின் வாயிலாக தெரிகிறது.

**வெள்ளிக்கலம்**

வெள்ளியாலான உண்கலம் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிள்ளைகள் உணவு உண்ணப் பயன்பட்டது. பெரிய வெள்ளிக்கலன்கள் பெரியவர்கள் உணவு உண்ணப் பயன்பட்டன.

அரண்மனையில் இவ்வெள்ளிக் கலன்கள் பயன்படுத்தப் பெற்றதை. மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி

மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி
மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து
ஆனா விருப்பிற் றானின் றூட்டி
மங்குல் வானத்துத் திங்கள் கோய்க்கும்

(பெரும் 477-480)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் விளக்குகின்றன.

**உரல், உலக்கை**

உரல் என்பது தானிய வகைகளைக் குற்றி அரிசியாக்குவதற்குப் பயன்படுத்தப் பெற்றது. தரையில் குழியைத் தோண்டி அதனுள் புல்லரிசியைப் போட்டுக் குற்றியதை

*நீழல்முன்றில் நில உரல் பெய்து*

*குறுங்காழ் உலக்கை ஓச்சி..........*

*(பெரும் 96-97)*

இந்த அடிகளில் இயற்கையாக பயன்படுத்தியதை குறிப்பிடுகின்றன. உரல் மரத்தாலும் செய்து உபயோகப்படுத்தியதனை கலித்தொகையில் கூறும் போது

*முகைவளர் சாந்துரல் முத்தார் மருப்பின்*

*(கலி 40:4)*

சந்தன மரத்தில் உரலைச் செய்து கொண்டுள்ளனர் என்பது தெரிகிறது.[2]

குழிசி

குழிசி என்பதற்குப் பானை என்று பொருள் குழி என்றால் பள்ளம் என்று பொருள். எனவே குழிவான அமைப்புக் கொண்ட பானை குழிசி என்று பெயர் பெற்றுள்ளது. உணவு சமைப்பதற்கு இதனை மிகுதியாகப் பயன்படுத்தியுள்ளனர்.

இக்குழிசி களிமண்ணால் செய்யப்படுகிறது. என்பதை (அகநானூறு 393:15) அடியில் கூறப்பட்டுள்ளது. பெரும்பாணாற்றுப்படையில் குழிசியின் பயன்பாட்டை கூறும்போது

வல்ஊற்று உவரி தோண்டி தொல்லை

முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி

(பெரும் 97-98)

விளிம்பு உடைந்து போன வாயினையுடைய குழிசியில் கிணற்று நீரைமுகந்து உலையாக அடுப்பில் ஏற்றியுள்ளனர். உழவோர் புதிதாக வருபவர்களின் மிக்க பசி தீரும் படி சோற்றை ஆக்குவதற்கு குழிசியை பயன்படுத்தியுள்ளனர் என்பதை

சோறு அடு குழிசி இளக, விழூஉம்

(பெரும். 366)

**தேக்கு இலை**

உணவு உண்பதற்கு தேக்கு இலையை பயன்படுத்தியிருக்கிறார்கள் பண்டைய தமிழர் இயற்கையாக கிடைக்கும் பொருட்களை பயன்படுத்தும் பண்பு பெற்றவர்கள் ஆவார். புதிதாக வருவோர்க்கு புல்லரிசிச் சோற்றை தேக்கு இலையில் வைத்து தருவார்கள் என்பதை ஏற்கனவே உணவினைப் பெற்ற பாணன் கூறினான் என்பதை

தெய்வமடையின் தேக்கிலைக் குவைஇ,நும்

(பெரும் .104)

இந்த அடியின் வாயிலாக தேக்கு இலை பயன்படுத்தியது புலப்படுகிறது. (அகநானூற்றில் 107:10 )அடியில் தேக்கு இலை பண்டைய மக்களிடம் புழங்கு பொருளாக இருந்தது எனக் குறிப்பிடுகிறது.

**வேளாண்மை பொருட்கள்**

மருதநில மக்கள் வேளாண்மையையே முதன்மை தொழிலாகக் கொண்டு விளங்கினர். வேளாண்மைக்கு கலப்பை,ஏர்,நெற்கூடு,அரிவாள் போன்ற பொாருட்களை பயன்படுத்தியுள்ளனர்.

**நெற்கூடு**

நெல்லினை சேகரித்து வைப்பதற்காக நெற்கூடுகளை வீட்டின் முற்றத்தில் முல்லை நிலத்து உழவர்கள் அமைத்துள்ளனர். என்பதை (பெரும்பாணாற்றுபடை 189) அடியில் குறிப்பிடப்பட்டுள்ளது. நெல்,வரகு முதலிய தானியங்களை பாதுகாப்பாக வைப்பதற்காக பயன்பட்டுள்ளது. இக்கூடு ஏணிக்கும் எட்டாத அளவு மிகவும் உயரமாக இருந்ததை

ஏணிஎய்தா நீள்நெடு மார்பின்

முகடு துமித்து அடுக்கிய பழம்பல் உணவின்

குமரி மூத்த கூடுலுங் நல்இில்

(பெரும் 245-247)

நெற்கூடு புழங்கு பொருளாக இருந்தது புலப்படுகிறது.

நெல்லின் அளவைத் தெரிந்து கொள்வதற்கு புள்ளிகள் இட்டுள்ளனர். இதன் வழியாக நெற்கூடு பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை (நற்றிணை 26:2-4) அடிகள் குறிப்பிடுகின்றன.

**கலப்பை**

உழவுத்தொழிலுக்கு மிக இன்றியமையாதன உழவுக் கருவிகள் ஆகும். இக்கருவிகளில் குறிப்பிடத்தக்கன கலப்பை ஆகும். மனிதன் கண்டுபிடித்த முதல் கருவி கலப்பை ஆகும். இதனால் தான் பயிர்த்தொழில் மேம்பட்டு விளங்கியது. கொட்டிலின் நெடிய சுவர் குறிய சகடத்தின் உருளைகளோடே கலப்பையையும் சார்த்தி வைத்திருந்ததனாலே தேய்ந்தது என்பதை

குறுஞ்சாட்டு உருளையிடு கலப்பை சார்த்தி

(பெரும் 188)

என்ற பாடலடியின் மூலம் அறியலாம்.

**இசைக்கருவிகள்**

பாணர்கள் தங்களுடனே இசைக்கருவிகளைப் எப்பொழுதும் வைத்திருப்பர். ஏனென்றால் அதனை இசைத்துப் பாடுவதையே தங்கள்

வாழ்க்கையாகக் கொண்டவர்கள். முழவு, வில்யாழ்,போன்ற இசைக்கருவிகளை புழங்கு பொருளாக பயன்படுத்தியுள்ளனர்.

**புல்லாங்குழல்**

முல்லை நிலத்தில் வாழ்ந்த இடையர்கள் குழல் கருவியை பயன்படுத்தியுள்ளனர்.காட்டில் கிடக்கும் மூங்கிலிலேயே துளை செய்து குழலை உருவாக்கிப் பாலைப் பண்ணை இசைத்தனர். மூங்கில் காடுகளில் காற்றடித்த பொழுது மூங்கில்களிலுள்ள துவாரங்கள் வழியாகக் காற்று ஊதிக்கொண்டு சென்ற ஓசையைக் கேட்டு, ஆதிமனிதன் துளைக்கருவிகளைக் கண்டுபிடித்தான்.[3]

செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்

(பெரும் 179)

துளைகளை உடைய புல்லாங்குழலை இடையர்கள் இனிய பண்ணை இசைத்த பண்பினை அறிய முடிகிறது.

**பேரியாழ்**

பேரியாழ் என்பது பெரிய யாழ் ஆகும். பேரியாழ் மீட்டுபவர் பெரும்பாணர் என்று கூறுவர். பேரியாழ் பற்றிய வருணனை கூறும்போது அதன் தன்மையையும், இசையினையும் அறிய முடிகிறது. பாணர்கள் கையில் எடுத்துச் செல்லும் அளவிற்கு 21 நரம்புகளுடன் பேரியாழை உருவாக்கி இசைமீட்டியுள்ளனர் என்பதை

நெடும் பணைத்திரள்தோள் மடந்தை முன்கைக்

குறுந்தொடி ஏய்க்கும் மெலிந்துவீங்கு திவவின்

(பெரும் 12-13)

இந்த அடிகளின் வழி வெளிப்படுகிறது.

**வில்யாழ்**

வில்யாழ் மிகமிகத் தொன்மை வாய்ந்த தமிழர் கண்ட இசைக் கருவியாகும். பெரும்பாணாற்றுப்படையில்வில்யாழ் பற்றிக்கூறும்போது.

செந்தீத் தோட்ட கருந்துளைக் குமிழின்

இன்றீம் பாலைமுனையிற் குமிழின்

புழற்கோட்டுத் தொடுத்த மரற்புரி நரம்பின்

வில்யாழ் இசைக்கும் விரலெறி குறிஞ்சிப்

பல்காற் பறவை கிளைசெத் தோர்க்கும்

புல்லார் வியன்புலம் போகி

(பெரும் 179-184)

என்ற அடிகளில் வில்யாழ் குறிப்பிடப்பட்டிருப்பது புலப்படுகிறது. ஒரு கோடும் நாணும் இருந்துள்ளது என்பதை அறியலாம்.

**போக்குவரத்து சாதனங்கள்**

ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு பொருட்களைக் கொண்டுச் செல்ல வண்டியும்,கழுதையும் பயன்படுத்தப்பட்டுள்ளது. நெய்தல் நில மக்களின் முக்கியத்தொழில் உப்பு விளைவித்தலும், அதனை விற்பனை செய்வதுமேயாகும். எருது பூட்டிய வண்டியினை உப்பு விற்கச் செல்லும்போது பயன்படுத்தினார்கள் உமணர்கள் என்பதை

முடலை யாக்கை முழுவலி மாக்கள்
சிறுதுளைக் கொடநுகம் நெறிபட நிரைத்த
பெருங்கயிற்று ஒழுகை மருங்கில் காப்ப
சில்பத உணவின் கொள்ளை சாற்றி
பல்எருத்து உமணர் பதிபோகு நெடுநெறி

(பெரும் 61-65)

என்ற அடிகள் விளக்கி நிற்கின்றன.

எருதினைப்போல கழுதைகளும் பொருள் எடுத்துச் செல்வதற்குப் பெரிதும் பயன்பட்டன. கழுதைகளின் மேல் உப்பினை ஏற்றிச் சென்றதாக இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மிளகுப் பொதியை ஏற்றிச் செல்வதற்கு கழுதையினை பயன்படுத்திய பண்பினை

அணர்செவிக் கழுதை சாத்தொடு வழங்கு
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்
(பெரும் 80-81)

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன.

**வீடுகள்**

பண்டைய மக்கள் தங்குவதற்கு இருப்பிடங்களை அவரவரர்கள் நிலத்தைச் சார்ந்து அமைத்துக் கொண்டனர் இருப்பிடமும் பண்டைய மக்களின் பண்பாட்டை வெளிப்படுத்துகிறது.

எயிற்றியர் குடிசைகளைக் கூறும் போது.

பிற உயிரினங்கள் உள்ளே புகாதவாறு அதாவது அணிலும் எலியும் நுழையாதவாறு வேலின் நுனி போன்று கூர்மையான புல்லால் வேயப்பட்ட கூரைகளால் ஆனது எயினர் குடிசை என்பதை

நீள் அரை இலவத்து அலங்குசினை பயந்த
பூளைஅம் பசுங்காய் புடைவிரிந் தன்ன
வரிப்புற அணிலொடு சருப்பை ஆடாது
யாற்று அறல் புரையும் வெரிநுடைக் கொழுமடல்
வேற்றலை அன்ன வைந்நுதி நெடுந்தகர்

ஈத்துஇலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை

(பெரும் 83-88)

இந்த அடிகள் விளக்குகின்றன.

**கோவலர் குடியிருப்பு**

கோவலர்கள் சிறு குடில் அமைத்துள்ளனர்.வாயில்கள் சிறிய அளவில் அமைத்து மூங்கிலால் ஆன கதவினை பொருத்தியிருந்தனர் கோவலர் என்பதை

குளகு அரை யாத்த குறுங்கால் குரம்பைச்

செற்றை வாயில்,செறிகழிக் கதவின்

(பெரும்147-148)

என்னும் பகுதியில் புழங்கு பொருளாக வீட்டிற்கு பயன்படுத்தியதை காணலாம்.

**ஆடைகள்**

ஆடை என்பது மனித நாகரிகத்தின் சின்னம். 'ஆடையில்லாத மனிதன் அரைமனிதன்' 'ஆள்பாதி ஆடைபாதி' போன்ற பழமொழிகள் ஆடையின் இன்றியமையாமையை விளக்கும். சங்க கால மக்களின் பண்பாட்டை விளக்குவனவாக ஆடை அமைகின்றன.

மலைபடுகடாமில் மகளிர் அழகிய நூலால் ஆன கலிங்க ஆடையை அணிந்திருந்ததை

இழை மருங்க அறியாநுழை நூற்கலிங்கம்

(மலை .561)

என்ற அடி சுட்டுகிறது.

**கலிங்கம்**

கலிங்கம் என்பது தூய்மையான ஆடையாகும். நன்கு நுட்பமாக நெய்யப்பட்ட ஆடை என்பதாகும். அதனை கூறும்போது

ஆவி அன்ன அவிர்நூற் கலிங்கம்

(பெரும் .469)

தொண்டைமான் இளந்திரையன் பாணர்களின் கந்தலாடையை நீக்கி ஆவி போன்ற மென்மையான ஆடையை அணியச் செய்த பண்பினை காண முடிகிறது.

மலைபடுகடாமில் மகளிர் அழகிய நூலால் ஆன கலிங்க ஆடையை அணிந்திருந்ததை

இழை மருங்க அறியாநுழை நூற்கலிங்கம்

(மலை .561)

என்ற அடி சுட்டுகிறது.[4]

**அணிகலன்**

பண்டைய மகளிர்கள் தங்களை அழகுப்படுத்திக் கொள்ள இயற்கையான அசோக தளிரும் பொன்னாலான அணியினையும் அணியும் பண்பு பெற்றவர்களாக இருந்தார்கள். பெரும்பாணாற்றுப்படையில் தலையணி, காதணி அணியும் முறையை மகளிர் பின்பற்றியுள்ளனர்.

**தலையணி**

தலையில் அணிகலன் அணியும் பழக்கம் விறலியரிடம் இருந்தது. கூந்தலினை அழகு செய்யும்போது பொன்னால் ஆன மாலையைச் சூடினர் என்பதை குறிப்பிடும்போது

புனைஇருள் கதுப்பகம் பொலிய பொன்னின்
தொடைஅமை மாலை விறலியர் மலைய

(பெரும் 485)

தொடைஅமை மாலை விறலியர் மலைய

(பெரும் 485-486)

இந்த அடிகள் மகளிரின் தலைணியை குறிப்பிடுகிறது.

**காதணி**

காதில் அணிகலன் அணிவதை பெண்கள் மிகவும் விரும்புவார்கள் நீராடுதுறையில் தோழியர் கூட்டத்துடன் நீர் விளையாட்டு விளையாட வரும் மகளிர் பொன்னாலான மகரக் குழையினை மறந்து வைத்துவிட்டுச்செல்வார் என்பதை.

வண்டல் ஆயமொடு உண்துறைத் தலைஇ

புனல் ஆடு மகளிர் இட்ட பொலங்குழை

(பெரும் 311-312)

இந்த அடிகள் விளங்குகிறது.

திருமுருகாற்றுப்படையில் சூரரமகளிர் பற்றிக் கூறும்போது அவர்கள் காதில் பொன்னாலான அணிகலன் அணிந்திருந்தனர் என்பதை.

நகை தாழ்பு துயல்வரூஉம் வகைஅமை பொலங்குழை

(முருகு 86)

இந்த அடிகள் குறிப்பிடுகின்றன.[5]

**அறிதல் கூறுகள்**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தவர்களின் நம்பிக்கைகள், வாழ்க்கை நிகழ்வுகள் வாயிலாக அறிதல் திறன் என்பது வெளிப்படுகிறது. பண்பாடு என்பது ஒரு வாழ்க்கைமுறை, ஒரு தனிமனிதனின் பழக்கவழக்கங்களுக்கும் அம்மனிதன் பிறரோடு கொள்ளுகிற உறவுகளுக்கும் அடித்தளமாக இருக்கும். பண்பாடு ஒருவரால் (அ)ஒரு குழுவினால் (அ) ஒரு சமூகத்தால் சுவீகரித்துக் கொள்ளக் கூடியது எப்போதும் செயல்பட்டுக்கொண்டேயிருப்பது. அதனால் வெளிப்படையாக அறியக் கூடியது.[6] பொழுதுகள் பற்றி நன்கு அறிந்தவராக தமிழர்கள் இருந்தனர். பொழுதுகள் இருநிலையில் உள்ளன. பெரும்பொழுது, சிறுபொழுது ஆகும். இவை இரண்டும்ஆறு ஆறாக பிரிக்கப்பட்டுள்ளன.

**கார்காலம்**

கார்காலம் என்பது கருமையான மேகம் என்பதாகும். கார்காலமாவது மழை பெய்யும் காலமாகும். ஆவணித்திங்களும், புரட்டாசித் திங்களும் மழை பெய்யும் காலமாகும். விறலியர் தலையில் அணியும் மாலைக்கு மின்னல் போன்று பொன்னாலானது என குறிப்பிடப்படுகிறது. மழை வரும் முன்பு மின்னல் தோன்றும் என்ற அறிவு இருந்தாலே அதனை தன் வாழ்வோடு ஒப்பிட இயலுகிறது. கடல் நீரினை முகந்து சென்று கார்காலத்திலே மழை பொழிகிறது என்பதை

உரவுக் கடல்முகந்த பருவ வானத்துப்
பகற்பெயல் துளியின் மின்னு நிமிர்ந்தாங்கு

(பெரும் 483   484)

இந்த அடிகளின் வாயிலாக அறிய முடிகிறது. தொல்காப்பியர் கார் காலத்திற்கான இலக்கணம் கூறியுள்ளார்.

காரும் மாலையும் முல்லை

(தொல்.952)

கார்காலமும், மாலைப்பொழுதும் முல்லை நிலத்திற்கு உரியது ஆகும்.[7]

**முதுவேனில் பருவம்**

பருவம் ஆறுவகையாக உள்ளன. அதில் முதுவேனில் பருவமும் ஒன்றாகும். ஆனித்திங்களும்,ஆடித்திங்களும் முதுவேனில் காலமாகும். ஞாயிறு

என்பது சூரியனைக் குறிக்கும். இது தன்னிடத்தே மற்ற நான்கு பூதமும் அகன்று விரிவதற்குக் காரணமான பெரியவானிடத்தே இரவுப்பொழுது மறைந்து பகற்பொழுது தோன்ற காரணமாகும். வேனில் காலத்தை கூறும்போது,

காய்சினம் திருகிய கடுந்திறல் வேனில்

(பெரும் 3)

முதுவேனில் காலத்தை தொல்காப்பியர் ஆறு பருவங்களை குறிப்பிடும் போது அதில் முதுவேனில் பருவம் பற்றி கூறுகிறார். பாலை நிலத்திற்குரிய பருவமாகும் என்பதை,

நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு

முடிவுநிலை மருங்கின் முன்னிலை நெறித்தே

(தொல் .955)

இந்த அடிகளில் குறிப்பிடுகின்றார்.[8]

**நம்பிக்கை**

ஒரு பண்பாட்டின் அறிதல் கூறுகளுள் நம்பிக்கையும் ஒன்றாகும். நம்பிக்கை என்பது தெளிந்த எண்ணத்தின் திடமான உறுதிப்பாடு ஆகும். அது பழக்க வழக்கங்களிலும் வேறுபட்டது. பூதங்கள் கைகளைக் கோர்த்து

துணைங்கையென்னும் ஒருவகையான ஆட்டத்தை ஆடும்.

கணங்கொள் சுற்றமொடு கைபுணர்ந்த டும்

துணங்கை அம்பூதம் துகில் உடுத்தவைபோல்

(பெரும் 234-235)

என்பது சங்ககால மக்களிடம் பேய் நம்பிக்கை இருந்தது தெரிகிறது

**.நெறியியல் கூறுகள்**

ஒரு பண்பாட்டின் நெறியியல் கூறுகள் எனப்படுபவை அம்மக்களின் வாழ்க்கை நெறிபடுத்தும் கூறுகளை குறிக்கும் நெறியியல் கூறுகளில் முதன்மையானவை விழுமியங்கள், குடிவழக்குகள்,வழக்கடிபாடுகள், வழக்கங்கள், பழக்கங்கள் முதலானவையாகும்.

**விழுமியங்கள்**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்விலும் செயலிலும் அவசியமென்று கருதப்படுகிறதோ அவையே விழுமியங்கள் ஆகும். தமிழ் குடியிலேயே தோன்றியவர்கள் வீரத்தினையும், ஈகைப்பண்பினையும் விழுமியங்களாக கருதினர்.



**போர்சிறப்பு**

தொண்டைமான் இளந்திரையன் போர்புரிவதில் சிறந்தவன் தன்னை எதிர்த்து கௌரவர்கள் போல படை வந்தாலும் அவர்களை எதிர்த்து வெல்லும் திறம் படைத்தவன் ஆவான்.

ஈர்ஐம்பதின்மரும் பொருது களத்து அவிய
பேர்அமர்க் கடந்த கொடுஞ்சி நெடுந்தேர்
..............................................................
அடங்காத் தானையோடு உடன்றுமேல் வந்த
ஒன்னாத் தெவ்வர் உலைவிடத்து ஆர்த்து
கச்சியோனே கைவன் தோன்றல்

(பெரும் 415-420)

என்பதை வீரப் பண்பை வெளிப்படுத்துகின்றன.

**பெண்கள் வீரம்**

சங்ககால மக்கள் தங்கள் வீரத்தைப் போரின் மூலம் வெளிப்படுத்தினர். ஆடவர் மட்டும் இல்லாமல் பெண்களும் போர் குணம் மிகுந்தவராக இருந்த பண்பினை.

யானை தாக்கினும் அரவுமேல் செலவினும்
நீல்நிற விசும்பின் வல்ஏறு சிலைப்பினும்
சூல்மகள் மாறா மறம் பூண் வாழ்க்கை

(பெரும்134-136)

யானை தன்னைத் தாக்க வந்தாலும்,தன் மேலே பாம்பு ஊர்ந்து சென்றாலும்,இடி

இடித்தாலும் சூல் கொண்ட பெண் கூட அஞ்சாத மறத்தன்மை மிக்க வாழ்க்கையை குறிஞ்சி நில மக்கள் மேற்கொண்டனர்.

**கொடை**

கொடை என்பது ஒரு வகையான பண்பாகும். பண்டைய மன்னர்கள் பிறரது சூழல் அறிந்து உதவுவதிலும், கொடை வழங்குவதிலும் தலைச்சிறந்தவர்கள் ஆவார்.

**வழிபாடு**

மனிதன் இயற்கையே செயல்படுப்பொருளாகி இதற்கு பின்னால் ஏதோவொரு சக்தியிருப்பதாக நம்பி தெய்வத்தை வணங்கத் தொடங்கினான். காலப்போக்கில் அதற்கு உருவம் கொடுத்து வணங்கினான். காஞ்சிபுரம் எத்தகைய சிறப்புமிக்கது என்று கூறும்போது வழிபாடு நடந்தது வெளிப்படுகிறது. உலகத்தில் உள்ள எல்லாச் சமயத்தாரும் தொழும்படி சிறப்பு மிக்கது என்பதை

மலர்தலை உலகத்து துள்ளும் பலர்தொழ
விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்

(பெரும் 410-411)

இந்த அடிகள் வழியாக வழிபாடும் விழுமியாக கருதப்படுகிறது.

**விருந்தோம்பல்**

விருந்து என்பது புதுமை என்பது பொருள் ஓம்பல்-பாதுகாத்தல் என்பதாகும். புதிதாக வந்தோரை பண்டைய காலத்தில் விருந்தினர் எனக் குறிப்பிடுகின்றனர் விருந்தோம்பல் என்பது சமூகத்தில் மதிப்பாகக் கருதப்பட்டுள்ளது. ஒவ்வொரு நிலத்தில் வாழ்வோரும் தங்களின் சூழலுக்கு ஏற்ப உணவு வழங்கியுள்ளனர்.

**எயிற்றியரின் எளிய விருந்தோம்பல்**

பாலை நிலத்தில் வாழ்ந்த எயிற்றியர் மிகச்சிறப்பான உணவினை உண்ணவில்லை. எறும்புகளால் சேகரிக்கப்பட்ட புல்லரிசியை கொணர்ந்து சமைத்து அதனுடன் காய்ந்த இறைச்சியையும் சேர்த்து பாணர்களுக்கு கொடுத்து மகிழ்ந்தனர் என்பதை,

தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ நூம்
பைதீர் கடும்பொடு பதமிகப் பெறு குவிர்

(பெரும் 104-105)

இந்த அடிகள் விளக்குகின்றன. வெப்பம் அதிகமான பகுதியில்வாழ்ந்தாலும் விருந்தினரை இன்முகத்துடன் அழைத்து விருந்தோம்பல் செய்துள்ளனர்.

**எயினர் மனையில் விருந்தோம்பல்**

பாலை நில நகரில் வாழ்ந்த எயினர்கள் பாணர்களுக்கு சிவந்த சோற்யையும், உடும்பின் பொரியலையும் வழங்கியதை.

சுவல்விளை நெல்லின் செவ் அவிழ்ச் சொன்றி
ஞமலி தந்த மனவுச்சூல் உடும்பின்
வறைகால் யாத்தது வயின் தொறும் பெறுகுவிர்

(பெரும் 131-133)

என்பதை பெரும்பாணாற்றுப்படை காட்டுகிறது.

**கோவலர் விருந்தோம்பல்**

முல்லை நிலத்தில் வாழ்ந்த கோவலர்கள் பாணர்களுக்கு அன்புடன் உபசரித்தனர் நண்டின் பார்ப்பு போன்ற தினை அரிசிச்சோறு அதாவது புதிதாக விளைந்த சோற்றை பாலுடன் சேர்த்து வழங்கிய பண்பினை,

மடிவாய்க் கோவலர் குடிவயிற் சேப்பின்
இருங்கிளை ஞெண்டின் சிறுபார்ப்பு அன்ன
பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிர்

(பெரும் 166-168)

**உழவரின் விருந்தோம்பல்**

மருதநிலம் மிகவும் செழிப்பான நிலமாகும்.இங்கு வாழ்ந்த உழவர்கள் பானர்களுக்கு உணவு அளிக்கும்போது வெள்ளைநிறச்சோறும், அதனுடன் மனையிலை வளர்க்கப்பட்ட கோழியினை பொரியல் செய்தும் மகிழ்ந்தனர்,

வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவீர்

(பெரும் 255-256)

என்பதை பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது.

**நெய்தல் மக்களின் விருந்தோம்பல்**

நெய்தல் நில மக்களாகிய வலைஞரின் இல்லத்தை அடைந்த பாணர்கள் தவிடு நீக்கப்படாத அரிசையும் நெல் முளையையும் கலந்து தயாரிக்கப்பட்ட கள்ளை சுட்ட பச்சைமீனோடு கொடுத்ததை (பெரும் 281-282) அடிகள் விளக்குகின்றன.

**அந்தணர் விருந்தோம்பல்**

பாணர்கள் பல்வேறு மக்களால் விருந்தோம்பப்பட்டவர்கள் அந்தணராலும் விருந்து பெற்றனர். நெல்லரிசி சோற்றையும் அதனுடன் மாதுளங்காய் மிளகு கலந்து கருவேப்பிலை இட்டு வதக்கி மாவடு ஊறுகாயுடன் உண்ணக் கொடுத்தனர். இதன் வழி அந்தணர்கள் உடலுக்கு நலம் தரும் உணவினை உண்ண அளித்த பண்பினை ( பெரும் 306-310) இந்த அடிகளின் வழி அறியமுடிகிறது.

**குடி வழக்குகள்**

ஒரு சமுதாயத்தில் அனைவரிடமும் காணப்படுவதே குடி வழக்கு எனப்படும். இது பழக்கத்தால் வருவது ஆகும். பண்டையத்தமிழர் தம் வாழ்க்கை யை இயற்கையோடு இணைந்து வாழந்துள்ளனர். அதன் வழியாகப்பல்வேறு பழக்க வழக்கங்களைப் பின்பற்றியுள்ளனர்.

**சுங்கம் பெறுதல்**

உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகம் பண்டைய காலத்தில் நடைபெற்றுள்ளது. அதற்கு சுங்கவரி வசூலிக்கும் பழக்கம் அக்காலத்தில் இருந்ததை,

புணர்ப்பொறை தாங்கிய வடுஆழ் நோன்புறத்து
அணர்செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்
உல்குடைப் பெருவழிக் கவலை காக்கும்

(பெரும் 79-81)

இந்த அடிகள் சுங்கம் பெறும் பழக்கத்தை பொதிசுமந்து செல்லும் கழுதைகள் அதன்வழி சென்றதன் வாயிலாக அறிய முடிகிறது.

**பரிசு வழங்கும் பழக்கம்**

தொண்டைமான் இளந்திரையன் தன்னையும் தன் நாட்டையும் புகழ்ந்து பாடும் பாணர்களுக்கு அவர்களின் கவிதிறனுக்கு ஏற்ப பரிசு வழங்கிய பண்பினை (பெரும் 23-28)அடிகள் விளக்குகின்றன.

**உப்பு விற்றல்**

உப்பு என்பது உணவிற்கு அவசியமான ஒன்றாகும். உப்பில்லா பண்டம் குப்பையிலே என்று பழமொழியும் உள்ளது. இத்தகைய உப்பினை உமணர்கள் விற்றதனை

சில்பத உணவின் கொள்ளை சாற்றி

(பெரும்.64)

என்ற அடி விளக்குகிறது. உப்பு விற்பது உமணர்களின் பழக்கமாகும்.

**செருப்பும், சட்டையும் அணிதல்**

மனிதன் பண்பாட்டில் வளர்ச்சி அடைய அடைய பழக்கமும் மாறுபடுகின்றன ஒரு காலத்தில் இலைதழைகளால் ஆடையை உடுத்தியவன் பிறகு நூலால் நன்கு நெய்யப்பட்ட சட்டை அணிந்துள்ளனர். ஒவ்வொருவரையும் அதிக தூரம் கடந்த செல்ல உதவுவது அவர்களுடைய கால்கள்தான். அதனால் அதனை பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் செருப்பினையும் அணியும் பழக்கம் இருந்துள்ளது.

அடிபுதை யரண மெய்திப் படம்புக்குப்

(பெரும் 69)

என்ற அடி புலப்படுத்துகிறது.

**வழக்கம்**

குறிப்பிட்ட சமூகத்தால் அங்கீகரிக்கபட்டுத் தொடர்ந்து வழிவழியாகப் பின்பற்றப்பட்டு வருவது வழக்கமாகும்.

**பன்றி வேட்டையாடுதல்**

வேட்டைத்தொழில் என்பது ஆரம்ப காலத்தில் தோன்றியது ஆகும். இரவில் பன்றியை வேட்டையாடும் வழக்கத்தை பெரும்பாணாற்றுப்படை கூறும்போது

அகழ்சூழ் பயம்பின் ஆகத்தொளித் தொடுங்கிப்

புகழா வாகைப் பூவி னன்ன

வளைமருப் பேனம் வரவு பார்த்திருக்கும்

அரைநாள் வேட்டம் அழுங்கிற்.....

*(பெரும் 108-111)*

என்ற பாடலடிகள் நடுயாமத்தில்குழிதோண்டி வைத்து பன்றியை வேட்டையாடிய வழக்கத்தை வெளிப்படுத்துகின்றன.

ஆம்பி வான்முகை அன்ன கூம்புமுகிழ்

உறையமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து

*( பெரும் 155-158)*

அவர்கள் வழக்கமாக கொண்டிருந்தனர்.

**மோர் விற்றல்**

கடைந்த தயிரிலிருந்துவெண்ணெய் பிரித்தெடுக்கப்பட்ட பிறகு மோரினை தலையில் சுமந்து சென்று விற்றுள்ளனர்.இதனை

நாண்மோர் மாறும் நன்மா மேனிச்

சிறு குழை துயல்வரும் காதிற் பணைத்தோட்

குறு நெறிக் கொண்ட கூந்தல் ஆய்மகள்

*( பெரும் 160-162)*

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**மகளிர் வண்டி ஓட்டுதல்**

பெண்கள் வண்டியினை ஓட்டும் திறமை கொண்டவராக இருந்துள்ளனர். குழந்தையை வைத்துக்கொண்டு வண்டி ஓட்டியதை,

மக உடை மகடூஉப் பகடுபுறந் துரப்பக்

(பெரும் 58)

என்ற பாடலடி பண்டைய கால பெண்களிடம் இருந்த வழக்கத்தை வெளிப்படுத்துகின்றன.

## தொகுப்புரை

! பெரும்பாணாற்றுப்படையில் பண்டைய தமிழர்கள் பற்றிக்கூறும்போது அவர்கள் வாழ்விற்கும் வளமைக்கும் தகுந்தவாறு பொருட்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

! வேளாண்மை செய்வதை நன்கு அறிந்தவராக இருந்துள்ளனர்.

! பேரியாழ் இசைப்பதையும் அதன் பண்முறையினையும் நன்கு அறிந்தவர்கள்.

! பண்டைய மக்கள் தாங்கள் வாழும் சூழலுக்கேற்ப குடியிருப்புகளை அமைத்திருந்தனர்

.! தொண்டைமான் இளந்திரையன் மன்னனை நாடி வரும் பாணர்கள் தங்கள் வறுமைநிலையிலிருந்து முற்றிலும் நீங்க வேண்டும் என்பதற்காக தூய்மையான ஆடையினைகொடுத்து அணியச்செய்யும் பண்பு புலப்படுகிறது.

! பருவ காலங்கள் பற்றி நன்கு அறிந்தவராக இருந்துள்ளார்கள் பண்டையத்தமிழர்கள்.

! வீரமும்,கொடை,ஈகை என்பது சிறந்த விழுமியங்கள் ஆகும். இத்தகைய தன்மையை இயற்கையிலேயே பெற்றவர்களாக பண்டைய மக்கள் இருந்தார்கள்.

! ஒவ்வொரு நிலத்திலும் வாழும் மக்கள் அவரவர்கள் தங்களுக்கு கிடைத்த உணவினை கொடுத்து விருந்தோம்பல் செய்தனர்.

## சான்றெண் விளக்கம்

1. இரா. செயபால் . அகநானூறு மூலமும் உரையும் , ப.499

2. அ. விசுவநாதன், கலித்தொகை மூலமும் உரையும் , ப.156

3. டி.எஸ். பார்த்தசாரதி, இசைக்கருவிகள் ப.84

4. பொ.வே.சோமசுந்தரனார், பத்துப்பாட்டு ப.31

5. ஆய்வுக்கோவை 2012, ப.59

6. தி.சு.நடராசன்,தமிழின் பண்பாட்டுவெளிகள், ப.4

7. தமிழண்ணல், தொல்காப்பியம், ப.293

8.மேலது,ப.293

9.இரா.சாரங்கபாணி, சங்கத்தமிழ் வளம்.

இயல் ஐந்து





# கூத்தராற்றுப் படையில் பண்பாட்டுக் கூறுகள்

# இயல் ஐந்து

## கூத்தராற்றுப்படையில் பண்பாட்டுக்கூறுகள்

ஆற்றுப்படை இலக்கியங்களில் ஐந்தாவதாக இருப்பது கூத்தராற்றுப்படை என அழைக்கப்படும் மலைபடுகடாம் ஆகும். செங்கண் மாத்துவேள் நன்னன் சேய் நன்னனின் மலையை யானைக்கு உவமித்து கூறுவதால் மலைபடுகடாம் எனப் பெயர் பெற்றது. இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனாரால் பாடப்பட்டது. 583 அடிகளைக் கொண்டது. கூத்தராற்றுப்படையில் உள்ள பண்பாட்டினை வெளிக் கொணர்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

பரிசில் பெற்ற கூத்தன், பரிசில் வேண்டிய கூத்தனை ஆற்றுப்படுத்துவதால் கூத்தராற்றுப்படை என்பர்.

### பொருள்சார் கூறுகள்

மக்கள் தங்கள் தேவைகளுக்காக செய்துகொள்ளும் அனைத்தும் பண்பாடு ஆகும். பொருள்சார் பண்பாட்டு கூறுகள் என்பது இயந்திரங்கள், கருவிகள், வீட்டு உபயோகப் பொருட்கள், உடைகள், அணிகலன்கள்,

கட்டடங்கள்,போக்குவரத்து சாதனங்கள், வேளாண் நிலங்கள், போர்க்கருவிகள் போன்ற எண்ணற்ற பொருள்கள் பொருள்சார் பண்பாட்டைச் சேர்ந்தவை ஆகும்.[1]

இசைக்கருவிகளை அதிகமாக தங்கள் வாழ்க்கையில் பண்டையத் தமிழர்கள் பயன்படுத்தியிருக்கிறார்கள். இது அவர்களின் புழங்கு பொருளாக இருந்துள்ளது. தோற்கருவிகள்,துளைக்கருவிகள்,கஞ்சக்கருவிகள் என்ற மூன்று பிரிவுகளுடன் அடங்கியுள்ளது.

**தோற்கருவிகள்**

முழவு,பறை தட்டை, எல்லரி, பதலை,ஆகுளி,தண்ணுமை போன்றன தோற்கருவிகள் ஆகும்.

**முழவு**

முழவு என்பது தோற்கருவிகளுள் ஒன்று. தண்ணிய வாரால் இழுத்துக்கட்டப்பட்டு இருக்கிறது. தோல் கட்டியுள்ள பகுதியில் பண்களை உண்டாக்கும் மழையைத் தருகின்ற இருண்ட வானத்தில் முழங்கு இடியைப் போல முழங்குகிறது.

விண்ணதிர் இமிழ்இசை கடுப்பப் பண்அமைத்துத்

திண்வார் விசித்த முழவொடு ஆகுளி

(மலை 2 -3)

இந்த அடிகள் முழவு புழங்கு பொருளாக பயன்படுத்தியதைக் குறிப்பிடுகிறது. மேலும் சில அடிகளில் முழவு பற்றி குறிப்பிட்டுள்ளது.

முழவுத்துயில் அறியா வியலுள் ஆங்கண்

(மலை.350)

நன்னனது மலையைப் பற்றி கூறும்போதுஅங்கு முழவுகள் தூங்காது ஒலித்துக்கொண்டிருக்கும் எனக் கூறப்பட்டுள்ளது.

மண்ஆர் முழவின் கண்ணும் ஓம்பிக்

கைபிணி விடாஅது பையக் கழிமின்

(மலை 382 - 83)

என்னும் அடிகளில் முழவு என்ற இசைக்கருவியைப் பாணர்கள் பாதுகாப்பாக எடுத்துச் சென்றுள்ளனர். இதன் வழியாக இசைக்கலையை வளர்க்க உதவும் கருவிகளை பாதுகாக்கும் தன்மையுடையவராக திகழ்ந்துள்ளார்கள்.

மண்கனை முழவின் தலைக்கோல்கொண்டு

தண்டுகா ராகத் தளர்தல் ஓம்பி

(மலை 370-371)

என்னும் அடிகளில் காட்டின் வழியாகச் செல்லும் கூத்தார்களையும்

அவர்களின் சுற்றித்தினரையும் வழிகாட்டும் மற்றொரு கூத்தன், நீங்கள் செல்லும் வழி மிகவும் அறிதானது. வழவழப்பாக இருக்கும். அதனால் முழவினை தூக்கிச் செல்லும் காவு மரத்தின் கோலை ஊன்றிச் செல்லுங்கள் என்றார்.

**பறை**

பறை என்னும் இசைக்கருவி மக்களிடம் அன்று முதல் இன்றுவரை வழக்கில் உள்ளது. இந்த கருவி மக்களிடையே செய்திகளைத் தெரிவிக்க பயன்படுத்தப்பட்டது.

படுத்துவைத் தன்ன பாறை மருங்கின்

எடுத்து நிறுத்தன்ன இட்டருஞ் சிறுநெறி

(மலை 14-15)

என்ற அடிகளில் பறையை இசைப்பதையும் அதன் நுண்மையும் நன்கு அறிந்தவராக இருந்துள்ளனர்.

திண்வார் விசித்த முழவொடு ஆகுளி ( மலை.3)

விரல் ஊன்று படு கண் ஆகுளி கடுப்ப (மலை .140)

கடும்பறை கோடியர் மகாஅர் அன்ன (மலை.236)

மான்தோற் சிறுபறை கறங்கக் கல்லென ( மலை.321)

ஆகுளி, சிறுபறை,கடும்பறை என பறை என்பதற்கு பெயர்கள் வழங்கப் படுகின்றன.மிகுந்த வாரினால் இழுத்துக்கட்டப்பட்டது என்றும், விரைந்து செய்தியைச் செல்லுவதற்குரிய பறை என்றும், மானின் தோலினால் செய்யப்பட்ட பறை என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.

பறை என்பது அதிகமாக மக்களிடம் புழக்கத்திலிருந்து என்பதை இந்த அடிகளின் வழியாக அறிய இயலுகிறது. இலக்கியமும்,இலக்கணமும் பறை என்னும் கருவியின் பயன்பாடு பற்றிக் கூறுகின்றன. தொல்காப்பியம் அகத்திணையியலில் கருப்பொருள்களில் பறை என்பதை தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகை பிறவும் கருவென மொழிப

(தொல் அகத்.20)

ஒவ்வொரு நிலத்திற்கும் உள்ள கருப்பொருளை கூறும்போது அதில் பறை முதலான தோற்கருவிகள் குறிப்பிட்டிருப்பது காணமுடிகிறது[2]

இலக்கியமும்,இலக்கணமும் பறை என்னும் கருவியின் பயன்பாடு பற்றிக் கூறுகின்றன. தொல்காப்பியம் அகத்திணையியலில் கருப்பொருள்களில் பறை என்பதை தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

தெய்வம் உணாவே மாமரம் புட்பறை

செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ

அவ்வகை பிறவும் கருவென மொழிப

(தொல் அகத்.20)

ஒவ்வொரு நிலத்திற்கும் உள்ள கருப்பொருளை கூறும்போது அதில் பறை முதலான தோற்கருவிகள் குறிப்பிட்டிருப்பது காணமுடிகிறது[2]

**தட்டை**

தட்டை என்பது வடிவத்தின்அடிப்படையில் தோன்றிய பெயராகும். தினைப்புனம் காக்கும் மகளிர்கள் கிளியை விரட்ட தட்டி ஒலி எழுப்பும் கருவி தட்டை என்பதை

ஒலிகழைத் தடை புடையுநர் புனந்தொறும்

கிளிகடி மகளிர் விளிபடு பூசல்

(மலை 328-329)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. குறிஞ்சிப்பாட்டில் குறிப்பிடும்போது

மூங்கிலினை குறுக்கே நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாகும்படி ஒன்றிலே தட்டுங்கருவி ஆகும்.[3]

நடுவு நின்று இசைக்கும் அரிக்குரல் தட்டை

(மலை.9)

கண்களுக்கு நடுவே நின்று ஒலிக்கும் ஓசையையுடையது தட்டையாகும். தட்டையினது ஒலியை கூறும்போது அது தேரை ஒலி போன்று உள்ளது என்று குறுந்தொகை குறிப்பிடுகிறது.

பருவாய்த் தேரை தட்டைப் பறையின்

கறங்கும் நாடன்

(குறுந் 193)

இந்த அடியின் வழியாக புழங்கு பொருளாகத் தட்டை இருந்தது தெரிகிறது.[4]

**தண்ணுமை**

தண்ணுமை என்னும் இசைக்கருவியானது தோலினால் போர்த்தப்பட்ட இரண்டு முகம் கொண்ட தாளக்கருவியாகும். இதனைக் கூறும்போது

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇச்

(மலை 471)

என்ற அடியில் வெண்நெல்லை அறுப்பவர்கள் கொட்டிய பறை ஓசை என்று கூறப்பட்டுள்ளது.

**பதலை**

பதலை என்பது ஒரு பக்கம் மட்டும் தோலினால் ஆனதாக இக்கருவி இடம் பெறுகிறது. மலைபடுகடாமில்,

நொடிதரு பாணிய பதலையும் பிறவும்

*(மலை 11)*

எனக் கூறுகிறது. கண்ணிமைக்கும் நேரத்தில் ஒலிக்கும் கருவியாகும்.

புறநானூறு பதலை என்னும் இசைக்கருவியைக் கூறும்போது

பதலை யொருகன் பையென வியக்குமின்

*(புறம் 152:17)*

இந்தக் கருவியை யானையின் துதிக்கை போன்ற பெருவாத் தியத்தையும் இது போன்ற கருவியை மன்னன் முன்பாக இசைத்துள்ளனர்.

என்ற அடியில் வெண்நெல்லை அறுப்பவர்கள் கொட்டிய பறை ஓசை என்று கூறப்படுகிறது.

**குழலிசைக் கருவிகள்**

குழலிசைக்கருவிகளின் வரிசையில் கோடு, தூம்பு,குழல் என்று கருவிகள் உள்ளன.

**கோடு**

கோடு என்பதற்கு கொம்பு என்பது பொருள். இந்தக் கருவி ஆதித்தமிழர்களின் இசைக்கருவிக்கு மூலக்கருவி ஆகும்.

மரியாதைச் சின்னங்கள் என்று போற்றப்படும் ஊது கருவிகள் வரிசையில் செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது கொம்பு. பழந்தமிழகத்தில் முல்லைத் திணைக்குரிய இசைக்கருவி கொம்பு ஆகும். [6]

மலைபடுகடாமில் கொம்பு பற்றிக் கூறும்போது

மின்னிரும் பீலியணைத்தழைக் கோட்டொடு

(மலை.5)

மயிற்பீலியால் கட்டப்பெற்ற அழகினையுடைய கொம்பு போன்ற கூத்தர்கள் பாதுகாப்பாக வைத்திருந்தனர்.

ராஜராஜன் காலத்தில் இந்த இசைக்கருவி செல்வாக்குப் பெற்றுத் திகழ்ந்தது. ஆலயங்கள் அனைத்திலும் கொம்பு இசைப்பாளர்கள் மக்களுக்கு அறிவிக்க இக்கருவி பயன்பட்டது. மேலும் திருவிழாக் காலங்களிலும் அறிவிப்புக் கருவியாகப் பயன்பட்டது. கொம்பு என்னும் கருவி மக்களின் முக்கிய தேவைகளுக்காவும், விழாகாலங்களிலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. [7]

**தூம்பு**

தூம்பு என்பது துளைக்கருவிகளுள் ஒன்றாகும். இது நெடுவங்கியம் என்றும் அழைக்கப்படுகிறது. மலைபடுகடாமில் தூம்பு வாத்தியத்தைப் பற்றிக் கூறும்போது

கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த்த தூம்பின்

இளிப்பயிர் இடமிரும் குறுப்பரம் தூம்பொடு

(மலை 6-7)

யானையின் கைபோல வளைவான வடிகமாக தூம்பு (அ) நெடுவங்கியம் என்னும் கருவி இருந்துள்ளது. பண்டையத் தமிழர்களின் புழங்கு கருவியாக பயன்பட்டுள்ளது.

கழை தூம்பின் கண்ணிட மிமிர

(மலை.533)

மூங்கில் இசைபோன்று பெருவாங்கியத்தின் (தூம்பு) திறந்த கண்கள் ஒலி எழுப்புகின்றன. பதிற்றுப்பத்தில் குறிப்பிடும்போது

கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கி

என்ற அடியில் வெளிப்படுகிறது.[8] ( பதிற்.41 -4)

**குழல்**

குழல் என்பது துளைக்கருவிகளுள் ஒன்றாகும். குழாய், புல்லாங்குழல் , ஊதுகுழல் என்று குறிப்பிடப்படுகிறது. குழல் கருவி மூங்கினால் செய்யும் முறையை பண்டையத் தமிழர்கள் அறிந்திருக்கிறார்கள்.

விளிப்பது கவரும் தீம்குழல் துதைஇ

(மலை.8)

துளைக்கருவியை சுருதி குறையாமல் இசைக்கும் முறையை இந்த அடியில் குறிப்பிடப்படுகிறது.

சிறுபாணாற்றுப்படையில் குழல் இசைப்பற்றி கூறும்போது விறலியா குழலோசையின் தாளத்திற்கு ஏற்ப கோமானைப்பாடி ஆடினர் என்பதை

தளைஅவிழ் தெரியல் தகையோற் பாடி

அறற்குழல் பாணி தூங்கி யவரொடு

(சிறு 161-162)

இந்த அடிகள் வெளிப்படுத்துகின்றன.[9]

**நரம்புக் கருவிகள்**

இசைக்கருவிகளுள் நரமபிசைக் கருவியும் ஒன்றாகும். யாழ் என்னும் பழமையான நரம்புக்கருவி தமிழர் வாழ்வில் முக்கிய இடத்தைப் பெற்று வந்திருக்கின்றது.

பேரியாழ், சீறியாழ் பற்றிய பண்புகளும் பயன்களையும் மலைபடுகடாம் கூறுகிறது.

**பேரியாழ்**

பேரியாழ் என்பது உருவத்தில் பெரிய யாழ் ஆகும். பேரியாழ், பரவையாழ் என்றும் அழைக்கப்படுகிறது.

பேரியாழ் ஓராயிரம் நரம்புகள் கொண்டது. இதனை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குத் தூக்கிச் செல்ல முடியாமல் இருந்துள்ளது.[10] கூத்தர்கள் பல்வேறு இசைக்கருவிகளுடன் பேரியாழ் என்னும் இசைக்கருவிகளையும் வைத்துள்ளனர் என்பதை

தொடித்திரிவு அன்ன தொண்டுபடு திவவின்

.......................................................

.......................................................

கிரல்ஓர்த்துத் தொடுத்த சுகிர்புரி நரம்பின்

...............................................................

வணர்ந்து ஏந்து மருப்பின் வள்ளுயிர்ப் பேரியாழ்

(மலை 21-37)

என்னும் அடிகள் பேரியாழை பயன்படுத்தியதையும், கூத்தார்கள் யாழை நன்கு நுட்பமாக வடிவமைக்கும் பண்பு நிறைந்தவராக இருந்துள்ளார்கள் என்பது தெரிகிறது.சிலப்பதிகாரம் பேரியாழைப் பற்றிக் கூறும்போது

பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன்

சீர் பொலியும் செங்கோடு செப்பினார் தார்பொலிந்து

மன்னும் திருமார் வண் கூடற் கோமானே

பின்னும் ஊவே பிற

(சிலம்பு)

என்னும் அடிகள் பேரியாழின் இயல்பை கூறுகின்றன.

**சீரியாழ்**

சீரியாழ் என்பது சிறிய யாழ் எனப் பொருள்படும். விறலியர்கள் சீரியாழின் ஓசைக்கு ஏற்ப விறல்பட ஆடும் பண்பினை

மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீரியாழ்

(மலை.534)

இந்த அடிகள் புலப்படுத்துகின்றன. கருமையான யாழில் மருதப் பண்ணை வாசிக்கும் பண்பு பெற்றவராக இருந்துள்ளனர்.

புறநானூற்றில் சீரியாழை குறிப்பிடும் போது

களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீரியாழ்

(புறம் )

என்று குறிப்பிடப்படுகிறது

**வேளாண்கருவிகள்**

வேளாண்மை என்பது மக்களின் பொருளாதாரத்தை நிர்ணயிக்க முக்கியமானதாகும். வேளாண் முறைகளையும், அதற்கு தேவையான கருவிளையும் தாங்களே உருவாக்கியும் பயன்படுத்தியிருக்கிறார்கள் பண்டையத் தமிழர்கள். குளிர், மகுளி (சால்), துளர்(களைகொட்டு) போன்ற கருவிகள் பயன்பட்டுள்ளன.

**குளிர்**

குளிர் என்பது அரிவாள் என்று பொருள்படும். இந்த கருவியைப் பயன்படுத்திதினை, அவரை, வரகு போன்ற பயிர்களை அறுவடை செய்துள்ளனர். என்பதை

குளிர்புரை கொடுங்காய் கொண்டன அவரை

..............................................................

இரும்புகவர் உற்றன பெரும்புன வரகே

(மலை 110-113)

இந்த அடிகளின் வழியாக குளிர் என்னும் கருவி மக்கள் பயன்படுத்தியதன் வழியாக அக்கால மக்களின் பண்பாடு தெரிகிறது.

**அகளம்**

அகளம் என்பது நீர்ப்பாசனத்திற்கு மக்கள் பயன்படுத்திய கருவி ஆகும். இதனை சால் என்றும் வழங்குவர்.

எருதுகளை பயன்படுத்தி நீர் பாய்ச்சும் முறை இக்கால மக்களிடமும் வழக்கத்தில் இருந்த ஒன்றாகும். எள் செடிகளுக்கு நீர்ப் பாய்ச்சுவதற்கு அகளம் பயன்படுத்தியதை

அகளத்து அன்ன நிறைசுனைப் புறவில்

(மலை.103)

இந்த அடி வெளிப்படுத்துகிறது.

**துளர்**

துளர் என்பது களைகொட்டு ஆகும். உழாமல் விதைத்த வெண் சிறுகடுகுகள்களைக்கொத்தியால் கொத்தப்பட்ட தோட்டங்களில் நெல் விளைந்தன.

தொய்யாது வித்திய துளர்படு துடவை

(மலை 122)

வயலில் களைகள் நீக்கினால்தான் பயிர்கள் நன்கு விளையும் என்ற பண்பாடு கொண்டவர்களாக இருந்துள்ளனர். பெரும்பாணாற்றுப்படையில் துளர் பற்றி கூறப்பட்டுள்ளது. நன்கு உழுது பின்பு களைக்கொட்டால் களைகளைக் களைந்து பயிர் விளைவிப்பர் என்பதை

தொடுப்பு எறிந்து உழுத துளர்படுதுடவை

(பெரும் 201)

இந்த அடியில் துளர் கருவி புழங்கு பொருளாக இருந்தது தெரிகிறது.[11]

தொழில்களின் வழியாகும் பண்பாட்டு நிலையினையும் மக்களினைப்பற்றியும் அறியமுடியும். வேளாண்மைத் தொழிலை எந்தப் பருவத்தில் செய்தல் வேண்டும் என்பதையும் அறிந்தவராக பண்புடைய தமிழர்கள் திகழ்ந்தனர்.

**வேட்டையாடுதல்**

ஆதிகாலத்தில் மனிதன் ஒன்றை வேட்டையாடிதான் உணவு உண்ண வேண்டும் என்ற நிலையில் இருந்த போது வேட்டைத்தொழிலைச் செய்துள்ளனர். இதற்கு பிறகு தாங்கள் விளைவித்த தினைகளை பாதுகாக்க கற்பொறிகளை வைத்து பன்றியை பிடித்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது.

**ஆடை**

ஆடை என்பது மனிதனின் பண்பாட்டின் சின்னமாகும். ஆள்பாதி ஆடைபாதி போன்ற பழமொழிகள் ஆடையின் இன்றியமையாமையை விளக்கும். கலிங்கம் என்பது மகளிர் ஆடையாக இருந்துள்ளது. நுண்ணிய இழையால் ஆன ஆடையை இடையில் உடுத்தியதை.

இழை மருங்கு அறியாநுழை நூற்கலிங்கம்

(மலை 561)

இந்த அடி சுட்டுகிறது.

பொருநராற்றுப்படையில் இழைபோன வழி ஈது நுட்பமாக நெய்யப்பட்ட, மெலிதான பட்டாடையை பாணர்கள் உடுத்த கரிகாலன் வழங்கினான் என்பதை

நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து
அரவுவரி அன்ன அறுவை நல்கி

(பொருந 82-83)

பாணர்கள் அதனை உடுத்தி மகிழ்ந்தனர் என்பதும் தெரிகிறது.[12]

**அறிதல்சார் கூறுகள்**

ஒரு பண்பாட்டின் அறிதல் சார்கூறுகள் என்பவை அப்பண்பாட்டைச் சேர்ந்தோரின் அறிதிறன் கூறுகளைக் குறிக்கும். பருவகாலம், இயற்கை நிகழ்ச்சிகள், வானவெளி, நம்பிக்கை, வழக்காறுகள் போன்றவை அறிதல் கூறுகளுடன் தொடர்புடையவை ஆகும்.

**நொடி பொழுது அறிதல்**

இசைக்கருவிகளை இயக்குவதிலும் அதன் ஓசையினையும் பண்ணினையும் நன்கு அறிந்திருந்தனர். கைநொடிக்கும் மாத்திரை, அளவிற்குள் ஒலிக்கும் இசைக்கருவியை பயன்படுத்தியதை

நொடிதரு பாணிய பதலையும் பிறவும்

(மலை .11)

இந்த அடி குறிப்பிடுகிறது.

**நீர் ஊறும் செடி**

பண்டைய தமிழர்கள் இயற்கையுடன் இணைந்தே வாழ்ந்ததால் அதன் குணங்களையும் அறிந்தவராக இருந்தனர். காட்டு வழியாகச் செல்லும் பாணர்களும் , கூத்தரும், உயருவைக் கொடியின் வேரை வாயிலிட்டு மென்றால் நீர் ஊறும், தாகம் தணியும் என்பதை அறிந்திருந்தனர்.

மாறுகொள ஒழுகின ஊறுநீர் உயவை

(மலை.136)

என்ற அடியின் வழியாக அறிதல் பண்பு வெளிப்படுகிறது.

**குணம் அறிதல்**

மனிதன் தோன்றிய காலம் முதல் இன்று வரை உயிரினங்களை தங்களுடன் வளர்க்கும் முறை உள்ளது. அதனால் அந்த உயிரினங்களின் தன்மையை எளிதில் அறிந்து கொள்கின்றனர். யானை தும்ப நிலையில் இடி போன்ற சத்தமும் இன்ப நிலையில் தும்பி போன்ற மென்மையான ஓசையும் எழுப்பும்.

நெடுஞ்சுழிப்பட்ட கடுங்கண் வேழத்து
உரவுச் சினந் தணித்துப் பெருவெளிற்பிணிமார்
(மலை 325-326)

நெடுஞ்சுழியில் அகப்பட்ட யானையைக் காப்பாற்றி அதன் சினத்தைத் தணித்துப் பாகர்கள் கட்டினர்.

**நெறியியல் கூறுகள்**

ஒரு பண்பாட்டைச் சேர்ந்தோரின் வாழ்வை நெறிப்படுத்தும் கூறுகளே நெறியியல் கூறுகள் ஆகும். விழுமியங்கள், குடிவழக்குகள், வழக்காறுகள், பழக்கவழக்கம், நெறிமுறைகள் முதலியனவாகும்.

**விழுமியங்கள்**

விழுமியங்கள் என்பது மதிப்புகள் என்பது ஆகும். ஒவ்வொரு காலகட்ட மக்களிடமும் குறிப்பிடத்தகுந்த முறைகள் விழுமியமாக போற்றப்படும். அந்த வகையில் மலைபடுகடாமிலும் சில விழுமியங்கள் குறிப்பிடப்படுகின்றன.
இந்த விழுமியங்கள் மக்களின் பண்பாட்டை வெளிக்கொணரவே உதவுகின்றன.

**வழிபாடு**

வழிபாடு என்பது பண்டையத் தமிழர்களிடம் இருந்த விழுமியமாகும். பாணர்கள்,விறலியர்கள் காட்டின் வழியாகச் செல்லும் போது, மடுக்களையுடைய ஆற்றின் கரையில் பழமையான மதில் இருந்தது. அதன் அருகில் பரவி வழிபடுதற்குரிய கடவுள் வடிவைக் கண்டால் தொழுது செல்லுங்கள் முன்பு பரிசு பெற்று திரும்பிய பாணர்கள் கூறியதை,

பராவுஅரு மரபின் கடவுள் காணின்

தொழாநிர் கழியன் அல்லது வறிது

(மலை 230-231)

என்ற அடிகள் வழிபாட்டினை வெளிப்படுத்துகின்றன.

**நடுகல்**

நடுகல் வழிபாடு செய்வது பண்டைய முறையாகும். இறந்த வீரர்களுக்காக எடுக்கப்படுவது ஆகும். வீரனின் பெயரும். பெருமையும் எழுதப்பட்டு மரநிழலில் நடப்பட்ட தெய்வத்தன்மை மிக்க நடுகல் வழிப்பாதைக்கருகில் அமைக்கப்பட்டது.

செல்லும் தேஎத்து பெயர் மருங்கு அறிமார்

கல் எறிந்து எழுதிய நல்அரை மூரா அத்த

(மலை 394-395)

என்ற செய்தியும் சுட்டப்பட்டுள்ளது. மேலும் தெய்வத்தன்மை மிக்க நடுகல்லை பாணர்கள் யாழ் வாசித்து வணங்கினர் என்ற செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

**விரும்தோம்பல்**

தமிழர்களின் விருந்தோம்பலில் சிறந்தவர்கள் என்பது அனைவரும் அறிந்த செய்தி. அவர்கள் தம் வீடு தேடி வந்தோர் யாவரையும் அவர்கள் உபசரிக்காமல் விடமாட்டார்கள்.

தாம் உண்ணும் உணவு எதுவாக இருந்தாலும் அதை விருந்தினர்க்கும் கொடுத்துத் தாமும் உண்டு மகிழ்வர்.

மான விறல்வேள் வயிரியம் எனினே
நும்மில் போல நில்லாது புக்குக்
கிழவிர் போலக் கேளாது கெழீஇச்
சேட்புலம்பு அகல இனிய கூறி
பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு
குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவீர்

(மலை 164-169)

தூரத்திலிருந்து வந்த பாணர்களின் வருத்தம் நீங்க இனிய சொற்களை கூறி அழைத்து அவர்களுக்கு பெரிய தசையில் நெய்யைப் பொழிந்து செய்த பொரியலையும், நிறம் மிக்குத் தோன்றும் தினைச் சோற்றையும் வழங்குவது பண்டைய மக்களின் பண்பாடாகும்.மாமிச உணவினை முதன்மையாக உண்ணும் பண்பு குறிஞ்சி நில மக்களிடம் இருந்துள்ளது.

**முல்லைநில விருந்து**

முல்லை நில மக்கள் தங்கள் நிலத்தில் கிடைக்கும் வெள்ளிய நிற பசுவின் இனிய பாலும் சோற்றையும் இடையர்களும், மகளிரும் வழங்கும்

பண்பை,

வளை ஆண் தீம்பால் மிளைசூழ் கோவலர்

வளையோர் உவப்ப தருவனர் சொரிதலின்

பலம்பெறு நசையொடு பதிவயின் தீர்ந்ததும்

புலம்புசேன் அகலப் புதுவிர் ஆகுவிர்

(மலை399-413)

**மருதநில விருந்து**

குறிஞ்சி,முல்லை நிலங்களுக்கு அடுத்து மருத நிலத்திலும் விருந்து உபசரிப்பு நடந்துள்ளது. இதனை

பொன் அறைந்தன்ன நுண் நோர் அரிசி

வெண் எறிந்து இயற்றியமாக் கண்அமலை

தண்ணென் நுண் இழுது உள்ளீடு ஆக

விசையம் கொழித்த பூழி அன்ன

உண்ணுநர்த் தடுத்த நுண்இடி நுவனை

(மலை 435)

இந்த அடிகளில் கூறும்போது மூங்கில் அரிசி அதனுடன் அவரை விதையும் புளியைக்கரைத்து சமைத்து புளியங்கூழினை உணவாகத் தருவர் என்பதையும், அரிசி சோற்றுடன் கறியை சேர்த்து சமைத்து சோற்றுத்திரளில் நெய் விட்டு உண்ணும் படி எப்பொழுதும் தருவர் என்பதையும், தினைமாவினை இடித்து கிடைத்த உணவினையும் பெற்றனர் என்பதையும் அறிய முடிகிறது.

**வழக்கம்**

வழக்கம் என்பது குடி வழக்குகளிலிருந்து மாறுபட்டது ஆகும். மலைபடுகடாமில் கூத்தரை மற்றொரு கூத்தர் ஆற்றுப்படுத்தும்போது கூறியது. மலைவழிப் பாதையில் செல்லும் போது பின்னால் வருபவர்களுக்கு வழியை தெரிவிப்பதற்காக அப்பகுதியிலுள்ள ஊகம் புல்லை முடிந்து வைத்துச் செல்லும் வழக்கம் இருந்ததை,

சந்து நீவிப் புல் முடிந்து இடுமின்

(மலை 393)

என்னும் அடி சுட்டுகிறது. பண்டைய தமிழர்கள் இந்த பண்பினை பெற்றவராக திகழ்ந்துள்ளனர்.

**பழக்கம்**

பழக்கம் என்பது தொன்று தொட்டு மக்களால் கடைபிக்கப்பட்டு வருவது ஆகும்.

**நிமித்தம் பார்த்தல்**

பயணம் செய்கின்றவர்கள் நிமித்தம் பார்த்து செல்லும் பழக்கம் இருந்திருக்கிறது. இதனை

புலரி விடியல் புள் ஓர்த்துக் கழி மின்

(மலை 448)

என்ற பாடல்வரி மூலம் அறிந்து கொள்ளலாம்.

**கள்ளும் தயிரும் பாதுகாத்தல்**

முற்றிய தேனால் செய்யப்பட்ட கள்ளின் தெளிவையும் காட்டில் வாழும் எருமைப்பால் தயாரிக்கப்பட்ட தயிரும் மூங்கில் குழாயில் ஊற்றிப் பாதுகாக்கும் பழக்கம் இருந்துள்ளது. இதனை

திருந்தமை விளைந்த தேக்கள் தேறல்

கான்நிலை எருமைக் கழைபெய் தீம்தயிர்

(மலை 522-23)

என்ற பாடல் அடிகளில் கள், தயிர் பாதுகாக்கும் பழக்கத்தை காணமுடிகிறது.

## தொகுப்புரை

! மலைபடுகடாம் என்பது கூத்தராற்றுப்படை என வழங்கப்படுகிறது.

! தோற்கருவிகள்,துளைக்கருவிகள், நரம்புக்கருவிகள் குறித்து நன்கு அறிவுப் பெற்றவராகவும் , இசையை வளர்க்கும் பண்பு பெற்றவராகவும் பாணர்களும் கூத்தர்களும் திகழ்ந்துள்ளனர்.

! வேளாண்மை செய்யும் முறைகளையும் அதற்கு எத்தகைய நீர்ப்பாய்ச்ச வேண்டும் என்பதையும் நன்கு அறிந்தவராக இருந்துள்ளனர்.

! பண்டைய கால மக்களிடம் வழிபாடு, நடுகல், விருந்தோம்பல், விழுமியங்களாக மதிக்கப்பட்டுள்ளன.

! கூத்தார்களும், பாணர்களும் தங்களைப் போல வருபவர்களுக்கு வழிகாட்ட வேண்டும் என்பதற்காக புல்லை முடிந்து சென்றுள்ளனர்.

! பண்டையத் தமிழரிடம் பயணம் செல்லும் முன் நிமித்தம் பார்க்கும் பழக்கம் இருந்துள்ளது.

! கள்ளும், தேனையும் பாதுகாத்து உண்ண வேண்டும் என்ற பண்பினை பெற்றவராக இருந்துள்ளார்கள் தமிழர்கள்.

**சான்றெண் விளக்கம்**

1. பக்தவத்சல பாரதி, பண்பாட்டு மானுடவியல் ,ப.158

2. இளம்பூரணனார் உரை, தொல்காப்பியம் பொருளதிகாரம், ப.16

3. நச்சினார்க்கினியர் உரை, பத்துப்பாட்டு மூலமும்,ப.468

4. பொ.வே. சோமசுந்தரனார், குறுந்தொகை ,ப.346

5.ஞா. மாணிக்கவாசகன் , புறநானூறு மூலமும் உரையும் , ப. 206

6. வெ. நீலகண்டன், வாழ்விழந்து வரும் கிராமிய இசைக்கருவிகள், ப.32

7. மேலது . ப.33

8. அ. ஆலிஸ், சங்க இலக்கியம் பதிற்றுப்பத்து. ப.127

9.இரா.மோகன், சிறுபாணாற்றுப்படை. ப.143

10.அ. ஸ்ரீவித்யா, யாழின் பரிணாம வளர்ச்சி, ப.51

11. இரா. மோகன், பத்துப்பாட்டு மூலமும் உரையும். ப.212

12. மேலது .ப. 83

# முடிவுரை

ஆற்றுப்படை இலக்கியங்களில் பண்பாட்டுக்கூறுகள் என்னும் தலைப்பு மூன்று கூறுகளான பொருள்சார்கூறுகள், அறிதல்சார் கூறுகள், நெறியில் கூறுகள் என்ற அடிப்படையில் ஆய்வினை காணும்போது ஒவ்வொரு ஆற்றுப்படையிலும் பண்பாடு வெவ்வேறு முறையாக உள்ளது புலப்படுகிறது.

திருமுருகாற்றுப்படையில் இறைவனான முருகனிடம் ஆற்றுப்படுத்துவதாக உள்ளன.

இதன் வழியாக வழிப்பாட்டின் மூலம் மனதினை பண்படுத்த இயலும் என்பதை கண்டறிய முடிகிறது.

மேலும் சிவப்பு நிறத்தில் ஆடை அணிதலை பழக்கமாக கொண்டிருந்தனர். காரணம் வேட்டைத்தொழிலை செய்ததால் இத்தகைய முறையை கொண்டிருந்தனர் என்பது வெளிப்படுகிறது.

இயற்கையான ஆடைகளை அணிதலை வழக்கமாக கொண்டிருந்தனர். மக்களை ஆட்சி செய்யும் மன்னனிடம் உயர்வான, பண்பாக தன்னை நாடி வந்தோரை ஏழடி முன் சென்று வரவேற்பதும், வழி அனுப்பும் பண்பு உடையவராக இருந்தது தெரிகிறது.

சிறுபாணாற்றுப்படையில் பண்டைய அரசனிடமும், கடையெழு வள்ளல்களிடமும் இருந்த ஈகைப்பண்பு வெளிப்படுகிறது.

இயற்கையுடன் இணைந்த வாழ்க்கையை வாழ்ந்துள்ளார்கள். அதனால் பருவகாலங்களில் நிகழும் மாற்றங்களை நன்கு அறிதல் திறனும் பண்பும் பெற்றவராக இருந்தனர் என்பது அறியமுடிகிறது.

பெரும்பாணாற்றுப்படையில் குறிப்பிடப்படும் மன்னன் தொண்டைமான் இளந்திரையன் தன்னை நாடி வரும் பாணர்களின் சூழ்நிலை அறிந்து முதலில் அவர்களுக்குத் தேவையான உணவும், உடையும் வழங்கினான்.

ஒவ்வொருநிலத்திற்கும் ஏற்ப கிடைத்த உணவுகளை தாங்கள் உண்பதோடு மட்டுமல்லாமல் பாணர்களுக்கும்அவர்களின் உறவினர்களுக்கும் வழங்கிய பண்பு புலப்படுகிறது.

இல்லறம், தொழில் என்று அதற்கு தகுந்த பொருட்களைப் அதிகமாக பெரும்பானாற்றுப்படையின் வழியாக கண்டறியமுடிகிறது.

கூத்தராற்றுப்படையில் அதிகமாக இசைக்கருவிகளை மக்கள் பயன்படுத்தி யுள்ளனர் என்றும், இசையை வளர்க்கும் பண்பின் நோக்கிலேயே உபயோகப் படுத்தியுள்ளது தெரிகிறது.

வேளாண்மையை செய்யும் முறையினையும் அதனை பாதுகாக்கும் முறையினையும் நன்கு அறிந்தவராக பண்டைய மக்கள் இருந்தது தெரிகிறது. கூத்தர்களும், பாணர்களும் தங்களை போல வருபவர்களுக்கு வழிகாட்டுதலாக இருக்கவேண்டும் என்ற இலக்குடையவராக இருந்தது புலப்படுகிறது.

இந்த ஆய்வின் முடிவாக பண்டைய மக்களிடம் சிறந்த பண்பாட்டு கூறுகளாக விருந்தோம்பல், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், வழிபாடு, விழுமியங்கள், வீரம், அணிகலன், ஆடைகள், ஈகை, கொடை, இசைக்கருவிகள், புழங்கு பொருட்கள் போன்றன இருந்தன என்பது புலப்படுகிறது.

## துணைநூற்பட்டியல்


1. அறவாணன், க.ப - தமிழர்மேல்நிகழ்ந்த பண்பாட்டுப் படையெடுப்புகள், தமிழ்க்கோட்டம், இரண்டாம் தெரு, மோகன் நகர், புதுச்சேரி 605 005, முதற்பதிப்பு-1987,2ஆம் பதிப்பு 1991.

2. அருள்ராசு. வே.சா. முனைவர் - பழந்தமிழகத்தில் இரும்புத்தொழில், தமிழ்ப்பல்கலைக்கழகம் தஞ்சாவூர், மூன்றாம் பதிப்பு 2002.

3. இராகவன் .அ - நுண்கலைச்செல்வர் , இசையும் யாழும், கலைநூற்பதிப்பகம், 60, பெருமாள் வடக்குத்தேர்த்தெரு பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2, முதற்பதிப்பு 1971.

4. இளம்பூரணனார் உரை - தொல்காப்பியம் பொருளதிகாரம், சாரதா பதிப்பகம், சென்னை 600 014, முதற்பதிப்பு மே 2005.

5. இராமகிருட்டிணன்.ஆ - தமிழக வரலாறும் தமிழர் பண்பாடும் தமிழ்பபேராசிரியர் (ஓய்வு), தியாகராசர்கல்லூரி, சர்வோதய இலக்கியப்பண்ணை, 32/1, மேல வெளிவீதி மதுரை-625 001. ஆறாம்பதிப்பு ஜீலை 2007

6. சாரங்கபாணி . இரா -சங்கத்தமிழ் வளம், மெய்யப்பன் பதிப்பகம், 53 புதுத்தெரு, சிதம்பரம் 608 001. முதற்பதிப்பு திசம்பர் 2003.

7. சோமசுந்தரனார்.பொ.வே -பத்துப்பாட்டு வரிசை :2 பொருநராற்றுப்படை, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக்கழகம், 522,டி.டி.கே.சாலை. ஆள்வார்பேட்டை, சென்னை 18

8. தமிழண்ணல் தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், மீனாட்சி புத்தக நிலையம், மயூராவளாகம் 48, தானப்பமுதலிதெரு, மதுரை 625 001 முதற்பதிப்பு ஏப்ரல் 2008 இரண்டாம் பதிப்பு திசம்பர் 2009

9. தாயம்மாள் அறவாணன்.முனைவர் - தமிழ்ச்சமூகவியல் , ஒரு கருத்தாடல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை600113 முதற்பதிப்பு 2002

10. துரைச்சாமிபிள்ளை.து. - கழக வெளியீடு புறநானூறு முதற்தொகுதி திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம், ஆள்வார்பேட்டை, சென்னை 18, முதற்பதிப்பு 1947 மறுபதிப்பு 2007

11. நச்சினார்க்கினயர் உரையும் மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்ககினிருரையும் - குறிஞ்சிப்பாட்டு தமிழ்பல்கலைகழகம் தஞ்சாவூர்

12. நடராசன். தி.சு - தமிழின் பண்பாட்டுவெளிகள், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி) லிட் 41பி சிட்கோ இண்டஸ் டிரியல் எஸ்டேட், அம்பத்தூர் சென்னை 600 098. முதற்பதிப்பு ஜீலை 2006.

13. நீலகண்டன் .வெ. - வாழ்விழந்துவரும் கிராமிய இசைக் கருவிகள், பெங்களூர் மீடிய பப்ளிக் கேஷன் லிமிடெட்,. எண்.7/13 சாலை அவன்யூ, அசோக்நகர், சென்னை 600 083. முதற்பதிப்பு டிசம்பர் 2011

14. நாச்சிமுத்து.கி - சங்க இலக்கிய ஆற்றுப்படைநூல்களில், கொடைநீதி அறக்கோட்பாடுகள் ஒருசிறு, குறிப்பு, ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகம், புதுடில்லி.

15. பத்தவத்சலபாரதி - பண்பாட்டு மானுடவியல் தமிழக அரசின் முதல்பரிசு பெற்றது புதுவை மொழியியல் பண்பாட்டு ஆராய்ச்சி நிறுவனம், புதுச்சேரி மெய்யப்பன் பதிப்பகம், 53 புதுத்தெரு, சிதம்பரம் 608 001. முதற்பதிப்பு நவம்பர் 1990.

16. பார்த்தசாரதி டி.எஸ். - இசைக்கருவிகள் நேஷனல் புக்டிரஸ்ட் இந்தியா ஊக்குவிப்பாளர், விநயோசிப்பாளர், நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிமிடெட் 41 பி சிட்கோ இன்டஸ்ரியல் எஸ்டேட் அம்பத்தூர், சென்னை 600 089. முதற்பதிப்பு 1994.

17. புலியூர்கேசியன் - மணிமேகலை, பாரிநிலையம், 184 பிராட், சென்னை 600 108, முதற்பதிப்பு 1961, மறுபதிப்பு 2009.

18. மாணிக்கவாசகன்.ஞா - புறநானூறு மூலமும் உரையும், உமாபதிப்பகம்,
58 ,ஐயப்பசெட்டிதெரு, மண்ணடி ,
சென்னை 600 001.
முதற்பதிப்பு செப்.1998.

19. மோகன் இரா. முனைவர் - பத்துப்பாட்டு முதற்பகுதி (மூலமும் உரையும்)
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட்
41,பி சிட்கோ இன்டஸ்ரியல் எஸ்டேட்
அம்பத்துார்,சென்னை 600 098,
முதற்பதிப்பு ஏப்ரல் 2004

20. முத்தையா .ஓ. - செம்மொழித்தமிழ்இலக்கியங்களில் தமிழரின்
மரபு அறிவுப்பதிப்புகள், செம்மொழி
தமிழாய்வு மத்திய நிறுவனம்,
காந்திகிராம கிராமியபல்கலைக்கழகம்,
தமிழ்த்துறை, தேசிய கருத்தரங்கம் 2012

21. மூர்த்தி அ.கி - லியோவின் தமிழ் அகராதி (முத்தமிழ்
அகரவரிசை) லியோபுக் பப்ளிஷர்ஸ்.
50 ,முதல் நெடுஞ்சாலை (தரைத்தளம்)
சி.ஐ.டி.நகர், சென்னை 600035

22. வரதராசனார் மு. முனைவர் - திருக்குறள் தெளிவுரை
திருநெல்வேலி தென்னிந்திய
சைவசித்தாந்த நூறபதிப்புகழகம் லிட்,
154 .டி.டிடி.கே.சாலை,
சென்னை 600 018.

23. ஸ்ரீவித்யா.அ - யாழின் பரிணாம வளர்ச்சி வனிதா பதிப்பகம்
11, நானாதெரு, பாண்டிபஜார்
தி.நகர், சென்னை 600 017
பதிப்பு 2009

24. வெற்றிச்செல்வன் - இசையியல், மணவாசகர்பதிப்பகம்
8/7 சிங்கர்தெரு, சென்னை 600 001.
முதற்பதிப்பு ஜீன் 1986
மறுபதிப்பு மார்ச் 1994.

**ஆய்வுக்கோவை**

**1.** பொருநாரற்றுப்படை
பதிப்பாசிரியர் முனைவர் இரா.மோகன்,
முனைவர் க. முருகேசன்,
குறிஞ்சிப் பதிப்பகம்,
24 செங்குந்தர்முதல்வீதி,
ஆம்பூர் 635 802.